[ஜனதா கட்சி பிளவுபட்டு, (பெரும்பான்மை இழந்து பிரதமர் ராஜினாமா செய்ததன் தொடர்பாய், சில அரசியல் சாசன பிரச்னைகள் தோன்றியுள்ளன. இவற்றிற்கான விளக்கங்களைப் பிரபல அரசியல் சாசன நிபுணர், வழக்கறிஞர் திரு ஆ. என். ஆர். ராவ் வழங்குகிறார். பேட்டி தேதி: 17-7-79]

கேள்வி: தற்போது மொரார்ஜி தேசாய் தலைமையில் தாற்காலிக அரசு (Caretaker government) இயங்குகிறது. இந்தருணத்தில் குடியரசுத் தலைவர் அதிகாரங்களைக் குறித்து இந்திய அரசியல் சாசனம் என்ன கூறுகிறது?

ராவ்: பிரிட்டன், இந்தியா போன்ற நாடுகளில் நடைபெறும் நாடாளுமன்ற அடிப்படையிலான ஜனநாயகத்தில் பிரதம மந்திரி ஒரு கட்டிடத்தின் அஸ்திவாரம் போன்றவர். இந்தியக் குடியரசுத் தலைவரை ஓர் 'ரப்பர் ஸ்டாம்ப்' என்றே பலரும் கருதி வருகின்றனர். இந்திய அரசியல் சாசனத்தின் ஷரத்துக்களும், அவற்றிற்கு சுப்ரீம் கோர்ட் அளித்துள்ள வியாக்யானங்களும் இக்கருத்தை உறுதிப்படுத்துவது போல் உள்ளன.

பிரதம மந்திரி தலைமையில் இயங்கும் மந்திரி சபையின் அறிவுரைப் படிதான் குடியரசுத் தலைவர் இயங்க வேண்டும் என்கிற கட்டாயம் உண்டு. நாடாளுமன்றத்தின் இரு சபைக்கும் சேர்த்து அவர் நிகழ்த்தும் உரை கூடமந்திரி சபையால் தயாரிக்கப்பட்டுத் தான் அவரால் படிக்கப்பட வேண்டும்.

ஆனால் தற்போதைய அரசியல் நெருக்கடியில் குடியரசுத் தலைவர் தானாக இயங்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டுள்ளது.

கேள்வி: தற்போதைய சூழ்நிலையில் மட்டும் குடியரசுத் தலைவர் எப்படி தானாக இயங்க அரசியல் சாசனம் இடம் கொடுக்கும்? தாற்காலிக மந்திரி சபையின் அறிவுரைப்படி அவர் செயல்படுவது பற்றி அரசியல் சாசனம் என்ன கூறுகிறது?

ராவ்: இந்தியாவில் பலர் 'ரப்பர்ஸ்டாம்ப்' போன்று செயல்பட வேண்டிய அதிகாரங்களைப் பெற்றுள்ள குடியரசுத் தலைவர் அவசியம்தானா? அப் பதவியையே எடுத்து விடலாமே என்றெல்லாம் கருத்துக்களை வெளியிட்டு வந்துள்ளார்கள். அவர்களது கருத்துப்படி குடியரசுத் தலைவர் பதவியையே எடுத்து விட்டிருந்தால் இன்றைய அரசியல் சூழ்நிலையில் இந்தியாவின் நிலை எவ்வாறு இருந்திருக்கும் என்று யூகித்துப் பாருங்களேன். இம்மாதிரியான நெருக்கடியான சூழ்நிலையில் தான் குடியரசுத் தலைவரின் அவசியமும், முக்கியத்துவமும் மக்களுக்குப் புரிகிறது.

# ஆட்சி கவிழ்ந்த நிலையில்..!

## எங்கே போகிறோம்?



அரசியல் சாசனப்படி நாடாளுமன்றத்தில் பெரும்பான்மை பலத்தைப் பெற்று இயங்கும் மந்திரி சபையின் அறிவுரைப்படி குடியரசுத் தலைவர் இயங்கவேண்டிய கட்டாயம் உள்ளது. ஆனால் தற்போது ஒரு தேசாய் தலைமையில் இயங்கும் தாற்காலிக அரசு நாடாளுமன்றத்தின் பெரும்பான்மை பலத்துடன் இயங்காததால் குடியரசுத் தலைவர் இம் மந்திரிசபையின் அறிவுரைப்படிதான் இயங்க வேண்டும் என்கிற கட்டாயம் கிடையாது.

**கேள்வி:** ஒரு வேளை எந்த அரசியல் கட்சிக்கும் அரசு அமைக்கப் போதுமான பலம் இல்லாமற் போனால் நாடாளுமன்றத்தைக் கலைக்க குடியரசுத் தலைவர் தாமாக முடிவெடுத்துச் செயல்படலாம் என்பது உங்கள் கருத்தா?

*ராவ்:* தற்போது குடியரசுத் தலைவர் முன்பாக இரண்டு முக்கியமான கேள்விகள் நிற்கின்றன. போதிய பலம் வாய்ந்த கட்சியைத் தேர்ந்தெடுத்து அவர்களை மந்திரி சபை அமைக்கச் செய்வது ஒன்று. அம்மாதிரி எந்தக் கட்சியுமே மந்திரிசபை அமைக்கும் அளவுக்குப் பலம் பெற்றிராவிடில் நாடாளுமன்றத்தைக் கலைக்க வேண்டியது இரண்டாவது பிரச்னை. இவ்விரண்டு விஷயங்களிலும் நான் மேலே குறிப்பிட்டபடி இந்திய அரசியல் சாசனத்தின் 53வது ஷரத்துப்படியும், ஷரத்து 83 (2-பி) அளிக்கும் அதிகாரப்படியும் குடியரசுத் தலைவர் தாமாகச் செயல்பட்டு நாடாளுமன்றத்தைக் கலைக்கும் அவசியம் நேர்ந்தால் அதனைக் கலைக்கலாம்.

1970-ம் ஆண்டு டிசம்பர் மாதம் அன்றைய பிரதமர் திருமதி இந்திரா காந்தி, தமது 'கரீபி ஹடாவோ'' (ஏழ்மையை ஒழிப்போம்) குறிக்கோளுக்காக, பெரும்பான்மை பலத்தில் தமது மந்திரி சபை இருந்தபோதிலும், நாடாளுமன்றத்தைக் கலைத்து, புதிய தேர்தல்கள் நடத்தப் புகுந்த சமயம் அவர் மீது சென்னை ஹைகோர்ட்டிலும், சுப்ரீம் கோர்ட்டிலும் வழக்குகள் தொடுத்தேன்.

''நாடாளுமன்றம் கலைக்கப்பட்டு விட்டதால் மந்திரி சபை இயங்க அதிகாரம் கிடையாது. ஆகையால் மந்திரி சபையையும் கலைத்துவிட வேண்டும். குடியரசுத் தலைவர் அரசியல் சாசனத்தின் 53-வது ஷரத்துப்படி தாமாக நிர்வாகம் செய்யலாம்'' என்று வாதிட்டேன்.

'நாடாளுமன்றம் கலைக்கப்பட்ட காலத்திலும் குடியரசுத் தலைவர் மந்திரி சபையின் ஆலோசனையும், உதவியும் இன்றிச் செயல்பட முடியாது' என்று சுப்ரீம் கோர்ட்டு தீர்ப்புக் கூறியது.

தற்போது மொரார்ஜி தலைமையிலான அரசு, நாடாளுமன்றத்தில் பெரும்பான்மை பலத்தை இழந்து, தாற்காலிக அரசு ஆனதால் சுப்ரீம் கோர்ட்டின் இந்தத் தீர்ப்பு தற்போதைய நிலைக்குப் பொருந்தாது என்பது என் கருத்து.

**கேள்வி:** ஒரு நாடாளுமன்றம் கலைக்கப்பட்ட நாளிலிருந்து, தேர்தல் முடிந்து அடுத்த நாடாளுமன்றம் தொடங்கும் வரை, நாட்டின் நிர்வாக அதிகாரம் குடியரசுத் தலைவரிடம் தான் இருக்கும். இம்மாதிரி ஒரு தனி நபரின் பொறுப்பில் நாட்டின் நிர்வாக அதிகாரம் மொத்தத்தையும் ஒப்படைப்பது சில சமயங்களில் நாட்டிற்கே பேராபத்தை ஏற்படுத்தலாம் அல்லவா?

*ராவ்:* உங்கள் கேள்வியிலே ஒரு திருத்தம். நாடாளுமன்றம் கலைக்கப்பட்ட நிலையில் இருந்தாலும், அன்றாட அலுவல்களைக் கவனிக்கும் விஷயத்தில் குடியரசுத் தலைவர் மந்திரி சபையின் உதவியுடனும், அறிவுரைப்படியும் தான் நடக்க வேண்டும்.

இந்திய அரசியல் சாசனத்தின் 79-வது ஷரத்துப்படி ஒரு நாள்கூட இடைவெளி

'தர்ம சங்கடம்' தம்பு!



இன்றி நாடாளுமன்றம் இருக்க வேண்டியது அவசியமாகிறது. 1970-ல் திருமதி இந்திரா காந்தி நாடாளுமன்றத்தைக் கலைத்தபோது இந்தத் தன்மையை மீறிச் செயல்பட்டதால் மூன்று மாதங்களுக்கு நாடாளுமன்றமே இல்லாமல் இருந்து சரித்திரம் ஏற்பட்டுள்ளது. இது தவறானது. இந்நிலை இனி என்றைக்குமே ஏற்படாமல் நாம் பார்த்துக் கொள்ள வேண்டும்.

இத்தருணத்தில் இப்பேட்டி மூலம் குடியரசுத் தலைவருக்கு ஒரு முக்கியமான யோசனையைக் கூற விரும்புகிறேன். நாடாளுமன்றத்தைக் கலைக்க வேண்டிய அவசியம் குடியரசுத் தலைவருக்கு நேர்வதாக வைத்துக் கொள்வோம். அந்நிலையில் அவர் தேர்தல் கமிஷனிடம் கலந்தாலோசித்து மறுதேர்தல்கள் நடத்தப்பட்டுப் புதிய நாடாளுமன்றம் விரைவில் என்றைக்குத் தொடங்க சாத்தியக் கூறுகள் உள்ளன என்பதைத் திட்டவட்டமாகக் கணித்து, அதன் அடிப்படையில் தற்போதைய நாடாளுமன்றம், புதிய நாடாளுமன்றம் தொடங்கப்படுவதற்கு முன் தினம் கலைக்கப்படுவதான அறிக்கையை இன்றே வெளியிடலாம். இவ்வாறு செய்வதன் மூலம்தான் ஒரு நாள்கூட இடைவெளியின்றி நாடாளுமன்றம் இருக்கும் நிலையை ஏற்படுத்த முடியும்.

நாடாளுமன்றம் ஒருநாள்கூட இடைவெளி இன்றி இருக்க வேண்டியதற்கு மேலும் சில அவசியங்கள் உள்ளன.

தற்போது, புதிய உதவி குடியரசுத் தலைவரை அடுத்த மாதம் தேர்ந்தெடுக்க வேண்டிய கட்டத்தில் இருக்கிறோம். நாடாளுமன்றத்தின் இரு சபையினரும், சேர்ந்து புதிய உதவி குடியரசுத் தலைவரைத் தேர்ந்தெடுத்தாக வேண்டும். இது ஒரு காரணம். இன்னொன்று, நாடாளுமன்றம் கலைக்கப்பட்டு சில காலம் ஆட்சி நடப்பதாக வைத்துக் கொள்வோம். திடீரென்று குடியரசுத் தலைவருக்கே ஏதேனும் அசம்பாவிதம் நிகழுமானால், நாட்டின் நிலைமை என்னவாகும்? தற்போதைய நிலை போன்று உதவி குடியரசுத் தலைவரின் பதவிக்காலமும் முடிந்து, நாடாளுமன்றமும் கலைக்கப்பட்டு இருந்தால், அச்சமயம் குடியரசுத் தலைவரும் இயங்க முடியாமற் போனால் நாட்டின் நிர்வாகம் தெருச் சண்டையில்தான் நிர்ணயிக்கப்பட வேண்டிய நிலை உண்டாகி விடும் அல்லவா?

கேள்வி: நாம் அமெரிக்கா போன்று மக்களால் நேரிடையாகத் தேர்ந்தெடுக்கப்படும் ஜனாதிபதி அடிப்படையிலான அரசை அமைத்துக் கொள்ள வேண்டுமானால் என்ன வழிமுறை மேற்கொள்ள வேண்டும்?

ராவ்: நாடாளுமன்ற அடிப்படையிலான ஆட்சியினின்று அமெரிக்கா போன்று ஜனாதிபதி அடிப்படையிலான ஆட்சி அமைக்க வேண்டுமானால் புரட்சிதான் உண்டாக

---

"ஹலோ... இருபதாயிரம் தரேன்"

"போதாது..."

"போனை வச்சுடாதீங்க... முப்பதாயிரம் தாட்டுமா?"

"நடக்காது"

"சரி, அரைலட்சத்துக்காவது ஒத்துக் கொள்ளுங்கள்"

"இன்னுங் கூட வேண்டும்."

"சரி அறுபதாயிரம் தரேன்—தயவு செய்து திரும்பக் கொண்டு வந்து விட்டு விடாதீங்க, கடத்திக்கொண்டு போன என் மாமியாரை!"

—ஜி. நடராஜன்



# அழகுக்கு உதவும் உதடுகள்!

[illegible]



வேண்டும். 'புதிய அரசியல் நிர்ணய சபை' ஏற்படுத்தப்பட்டு ஏராளமான வழிமுறைகளைப் பின்பற்றியாக வேண்டும்.

**கேள்வி:** தற்போதைய அரசியல் சாசனத்தின் மீது திருத்தங்களைக் கொண்டு வந்து இம் மாற்றத்தை ஏற்படுத்த முடியாதா?

ராவ்: நிச்சயம் முடியாது. 'நமது அரசியல் சாசனத்தின் அடிப்படை அமைப்பைப் பாதிக்கும் விதமாக எவ்வித திருத்தத்தையும் கொண்டு வர முடியாது' என்று கேசவானந்த பாரதி வழக்கில் சுப்ரீம் கோர்ட் தீர்ப்பு வழங்கியுள்ளது.

**கேள்வி:** பெரும்பான்மை பலத்தை இழந்தாலும் நாடாளுமன்றத்தில் அதிக அங்கத்தினர் கொண்ட கட்சியின் தலைவர் என்ற முறையில் மறுபடியும் தம்மைத்தான் ஆட்சியமைக்கக் குடியரசுத் தலைவர் முதலில் அழைக்க வேண்டும் என்று மொரார்ஜி தேசாய் விண்ணப்பித்துக் கொண்டிருக்கிறாரே! அரசியல் சாசனத்தின் அடிப்படையில் இது சரிதானா?

ராவ்: அரசியல் சாசனத்தில் இதற்குப் பதில் இல்லை. விவேகத்தில்தான் இதற்குப் பதில் சொல்ல முடியும்.

திரு மொரார்ஜி தேசாய் ராஜினாமா செய்தது பிரதம மந்திரி பதவியில் இருந்துதான். இதற்குக் காரணம் அவரது கட்சி நாடாளுமன்றத்தின் பெரும்பான்மை பலத்தை இழந்து விட்டது என்பதால்! தற்போது நாடாளுமன்றத்தின் அதிக அங்கத்தினர் கொண்ட ஜனதா பார்லிமெண்ட் கட்சியின் தலைவரைத்தான், அவர் யாராக இருந்தாலும் சரி, குடியரசுத் தலைவர் முதலில் ஆட்சியமைக்க அழைக்க வேண்டியது நியாயம் என்பது என் அபிப்பிராயம்.

ஒருவன் தெருவில் ஒரு லாடத்தைக் கண்டெடுத்து 'லாடம் கிடைத்து விட்டது. இனி வேண்டியதெல்லாம் குதிரை மட்டும்தான்' என்றானாம்.

இன்றைய நிலைப்படி ஜனதா பார்லிமெண்ட் கட்சியிடம்தான் குதிரை இருக்கிறது. மாற்றுக் கட்சியினரிடம் இருப்பது லாடம் மட்டுமே. யாரை அழைத்து அரசு அமைக்கச் சொல்ல வேண்டும் என்று தீர்மானிக்க வேண்டிய பொறுப்பு குடியரசுத் தலைவரிடம் உள்ளது. அவர் புத்திசாலித்தனமாகச் செயல்படுவார் என்று நம்பலாம்.

**கேள்வி:** தற்போதைய அரசியல் நெருக்கடியின் மத்தியில் தேசிய அரசு அமைக்கப்பட வேண்டும், என்று தமிழக முதல்வர் கூறியுள்ளாரே! அதைப் பற்றித் தங்கள் அபிப்பிராயம் என்ன?

ராவ்: அவர் யோசனை அரசியல் ரீதியான ஓர் ஆசையே தவிர அரசியல் சாசன ரீதியான யோசனை அல்ல. அரசியல் சாசனத்தைப் பற்றி நான் பேசத் தயார். அரசியல் பேச நான் விரும்பவில்லை.

பேட்டி: நாயகன்
புகைப்படம்: உத்ரா

---

அது ஒரு விசித்திரத் திருமணம். மணமகன் ஒரு மோதிரத்தை, மணமகளின் கை விரலில் அணிவித்தான். அவள், அவன் கழுத்தில் மலர் மாலையைப் போடவில்லை. ஆறு அடி நீளமுள்ள பாம்பை மாலையாக அவன் கழுத்தில் அணிவித்தாள். பின்னர், பாதிரியார் 'கணவன்-மனைவி' என்று அறிவித்து வைபவத்தை முடித்து வைத்தார். ஏன், பாம்பு மாலையாகப் போடப்பட்டது? ஆதியில் ஏடன் தோட்டத்தில் நிலவியிருந்த பரம அமைதியைக் குலைப்பதற்குச் சர்ப்பம்தானே காரணம்! இது நடந்தது தைவானில்!

—மனோகரன்



தமிழ்ப் பட உலகம் முற்போக்கு என்ற புதுமைக் கடலைக் கடைந்தபோது ஏற்பட்ட 'புதிய அலை'களிலே விளைந்த ஆலகால விஷத்தின் நச்சுப் புகையில் ரசிகர்கள் மூச்சு முட்டித் திக்கு முக்காடிக் கொண்டிருக்கும்போதே, அமுதம் பிறப்பதற்கான அறிகுறிகளும் தோன்றிக் கொண்டிருக்கின்றன. இந்தச் சுப சூசகங்களில் தேவதைக்கும் பங்குண்டு.

அமெரிக்க சரித்திரத்தில் 'கோல்ட் ரஷ்' என்றொரு கால கட்டம். தங்கம் தேடி லாப மடைய ஓடினார்கள் மக்கள். அதே போல நம் படாதிபதிகளும் இப்போது கிராமங்களைத் தேடி ஓடிக் கொண்டிருக்கிறார்கள். இந்த ஓட்டத்திலும் ஒரு விதத்தில் நன்மையே. நம் மண் வாசனையோடு கூடிய கதைகள் கிடைக்கின்றன. நாம் மறந்து விட்ட, நமக்குத் தெரியாத பழக்க வழக்கங்களை விளக்குவதாக அமைந்திருக்கின்றன இப்படங்கள். இயற்கை அழகு கொழிக்கும் பல கிராமங்களைக் கண்டு களிக்க முடிகிறது.

செயற்கையாக இல்லாமல் வேண்டுமென்றே வில்லன்களையும் வில்லத் தனங்களையும் புகுத்தாமல் யதார்த்தத்தில் வாழும் தாயம்மாவையும் காளிமுத்துவையும் துளசியையும், கிராம நாட்டாண்மைக்காரரையும் புதிய பரிணாமங்களிலே திரையில் உலவ விட்டு, நம் மனத்தில் பதியச் செய்திருக்கிறார் கதை வசன கர்த்தா திரு செல்வராஜ். அவர் உருவாக்கிய பாத்திரங்களை உயிரோட்டமுள்ள படைப்புக்களாக்கித் தந்திருக்கிறார் இயக்குனர் திரு பி. என். மேனன். தங்கள் காமிராத் திறமையினால் தேவதைக்கு அழகூட்டியிருக்கிறார்கள் ராமச்சந்திரனும் அசோக்குமாரும். தேவதையின் கானத்தை இனிக்கச் செய்திருக்கிறார் ஷியாம்.

தேவதை படத்தில் 'டாப்'பாக நடித்திருப்பவர் கிராமத்துப் பெரியதனக்காரராக வரும் செந்தாமரைதான். அவர் நடிக்கவில்லை. அந்தப் பாத்திரமாக வாழ்ந்து காட்டுகிறார். என்ன கம்பீரம்! என்ன லாகவம்!

இது சிவகுமார் சகாப்தம். சதம் போட்டு முன்னேறிக் கொண்டிருப்பவர். காளிமுத்துவின் பாத்திரத்தை அநாயாசமாகச் செய்து அப்ளாஸ் பெறுகிறார். கிராமத்தான் நடிப்பு சிவகுமாருக்குக் கைவந்ததாயிற்றே! பண்பட்ட பழம் நடிகை ஜெயந்தி. தாயம்மா பாத்திரத்தில் தேவதையாகி ஜ்வலிக்கிறார். தாயம்மாவைக் காதலித்து ஆனால் மணக்க முடியாமல் பூசாரியாகப் போகும் துளசியின் (ஜெய் கணேஷ்) நடிப்பு அடக்கமாக, ஆழமாக, அழகாக இருக்கிறது. தாயம்மாவும் துளசியும் ஆரம்பத்தில்பழகும் விதம் கணவன் மனைவி போல் அத்தனை நெருக்கமாக இருந்திருக்க வேண்டாம். பிறகுதான் அவர்கள் மணமாகாத காதலர்கள் என்பது புரிகிறது.

காளிமுத்துவின் காதலியாக — மனைவியாக வரும் புது முகம் லாவண்யாவுக்கு நல்ல முகவெட்டும், வெடுக்குப் பேச்சும் பாத்திரப் பொருத்தமும் இருக்கின்றன. பட்டை தீட்டினால் பளிரிடலாம் பட உலகில்.

தாயம்மாவுக்குக் களங்கம் கற்பித்து ஊரே ஒதுக்குவது உருக்கமான கட்டம். அவளைக் கடைசியில் கொன்றிருக்க வேண்டாம்.

தரமான வசனங்களும், வகையான கதையும், வளமான நடிப்பும் சேர்ந்து சச்சு கருணியின் விரசமான ஹாஸ்யத்தை மறக்கச் செய்து விடுகின்றன.

போற்றுதலுக்கு உரியவள் தேவதை.

- ரசிகன்

# தேவதை பட விமர்சனம்



# Kalki Shopping Page

எழில்மிகு வண்ணங்களில்
அழகுப் பொருளாக ஆக்கப்பட்டு
ஆடிவரும் தென்றலையும்
தவழ்ந்துவரும் பூங்காற்றையும்
உங்களுக்கு அள்ளித்தரும்
ஒரே ஃபேன் வெஸ்டெர்லி

நான்குவித வண்ணங்களில் கிடைக்கிறது



# வெஸ்டெர்லி

ஃபேன்களில் சிறந்தது

தனித்தன்மை வாய்ந்த சோக்
ரெகுலேட்டர் உங்களுக்கு
30% வரை மின்சாரச்செலவை
மிச்சப்படுத்துகிறது.

இன்றே
வெஸ்டெர்லி ஃபேன்களை வாங்கிடுவீர்!

## FREE DEMONSTRATION

NEW
**Sumeet**
**Kitchen Machine**
400 Watts 30 Mins.Rating
230 V AC/DC



between
5-00 & 7-30 p.m.
on Friday & Saturday

**at VIVEK AGENCIES**
133, Royapettah High
Road Mylapore,
Ph: 76661, 76923.

205, Purasawalkam
High Road, Madras
Ph: 662462, 663545

1195

# STANDARD




## Solid State TV

**M/s SUKI ELECTRONICS**
C-3, Kapaleeswarar Shopping Complex
Venkatesa Agraharam
(Near Saibaba Temple)
Madras-600 004 – Phone : 433019

**M/s AUDIO ELECTRONICS**
67, Royapettah High Road
Madras-600 004 – Phone : 74202

**M/s RAJA ENTERPRISES**
228, T. H. Road Tiruvottiyur
Madras-600 019 – Phone : 553840

**M/s JAYANTHI ELECTRONICS**
1/4-5, General Hospital Road
Vellore-632001 – Phone : 22995

# Kalki Shopping Page


டில்லி காட்சி— 20.7.79 அன்று கண்டது!
அரசு அமைக்க குடியரசு தலைவர் அழைப்பு
இனிமேல் பசுத்தோல் வேண்டியதில்லை!
மொரார்ஜி
எனக்குள்ள ஆதரவு நிதர்சனமாகத் தெரிகிறது!
எப்படியும் என் வாயில் தான் விழப் போகிறது!
பிரதமர் பதவி
முத்தவங்களுக்கு ராத்திரி! நமக்குப்பகல்!
அது நான் உனக்குக் கற்றுக் கொடுத்த பாடம் தானே!
நான் உன்னைப் போக விடமாட்டேன். நீ என்னை இழுக்கச் சொல்லாதே!
ஜன சங்கம்
இடதுசாரிகள்
ஜனசங்கம் ஆர்.எஸ்.எஸ். கூடாது!... இந்திரா சந்தோசம் உதவாது!

கல்கி

1979 ஜூலை 29
சித்தார்த்தி ஆடி 13
மலர்: 37 இதழ்: 52



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# ஓரம்போ! – 1

ஓரம்போ பாடலைப் பற்றிய ஒரு சர்ச்சை இந்தப் பத்திரிகையில் ஆரம்பமானதுமே வேறு பத்திரிகைகளும் அதைப் பற்றிக் கொண்டு விவாதத்தைத் தொடர்ந்தன. நமது காரியாலயத்தில் நூற்றுக்கணக்கான கடிதங்கள் வந்து குவிந்தன. இவையெல்லாம் சினிமாவுக்குள்ள அபரிமிதமான செல்வாக்கை எடுத்துக் காட்டுவன.

ஓர் இருட்டறையில் இருந்து கொண்டு நம்மைவிடப் பல மடங்கு பெரிதான உயிருள்ளது போன்ற மனித உருவங்களைத் திரையில் பார்க்கும்போது அது நமது உள்ளத்தில் ஏற்படுத்தும் பாதிப்பு அளப்பரியது என்று மனோதத்துவ நிபுணர்கள் கூறுகிறார்கள். அங்கு பார்க்கப்படுகிற, கேட்கப்படுகிற ஒவ்வொரு செயலுக்கும் சொல்லுக்கும் மிக அதிகமான சக்தி உண்டு. எனவே திரைப்படத் துறையில் ஈடுபட்டு மக்களைக் கவர நினைப்பவர்களுக்கு மிகப் பெரிய பொறுப்பு உண்டு. அவர்கள் பணம் பண்ண வேண்டியதுதான். ஆனால் அது ஒன்று மட்டுமே அவர்கள் நோக்கமாய் இருக்கக் கூடாது. அதிலும் இந்தியாபோன்ற வளர்ந்து வருகிற, இன்னும் வளர்வதற்கு எவ்வளவோ காத்திருக்கிற நாட்டில், கல்வி அறிவு அதிகம் வளராத தேசத்தில், திரைப்படம் போன்ற பொதுத் தொடர்பு சாதனங்கள் மிகுந்த எச்சரிக்கையுடன் பயன்படுத்தப்பட வேண்டும். இல்லையெனில் மக்களுடைய உழைப்பார்வம், ஊக்கம், உற்சாகம், கலைத்திறன், ஒழுக்கம், நேர்மை, பண்பாடு எல்லாம் படிப்படியாகக் கெட்டு அதனால் தேசமும் பாழாகும். மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது உருப்படியாக நிலையாக இருப்பது போல் தோன்றும் வேலிக்கம்பு, உள்ளே செல்லரித்து விட, திடுமென ஒருநாள் மடிந்து சாய்வது போல் தேச மக்களும் சாய்வார்கள்.

இதற்கு இடம் தரலாமா? எனவேதான் சென்ஸார்கள் இருக்கிறார்கள். ஆனால் தனி மனிதன் சுதந்திரங்களை மிக முக்கியமானதாகக் கருதும் ஜனநாயகத்தில் சென்ஸார்களும் ஓரளவுக்குத்தான் கண்டிப்புக் காட்ட முடியும். எனவே, சென்ஸார்களைவிட அதிகமான பொறுப்புணர்ச்சியுடன் படாதிபதிகள்தாம் நடந்து கொள்ள வேண்டும்.

தற்போது நமது திரைப்படங்களில் ஆபாசக் காட்சிகள் நடனங்கள் மட்டுமின்றி ஆபாசப் பாடல்களும், வசனங்களும் மலிந்து விட்டன. பச்சையான சொற்களை உடைய பாடல்களைவிட இன்னும் அதிகமாகவே மனத்தைக் கெடுக்கும் இருபொருள் தொனிக்கும் பாடல்கள், வசனங்கள் வேண்டுமென்றே படத்தின் இடையில் பொருத்தமில்லாவிடினும் கூட சேர்க்கப்படுகின்றன.

இவற்றை நீக்குவது சென்ஸார்களால் சட்ட திட்டங்களின்படி முடியாமல் இருக்கலாம். ஆனால் அரசாங்க ஸ்தாபனமாகிய அகில இந்திய ரேடியோ இவற்றை ஒலிபரப்புவதில் கண்டிப்புக் காட்டுவது நல்லதே. அது அவர்கள் கடமையும் கூட. ஒரு சினிமா தனி நபர்களால் லாபநோக்கத்தை மனத்தில் கொண்டு தயாரிக்கப்படுவது. அகில இந்திய ரேடியோ மக்களின் வரிப்பணத்தைக் கொண்டு மக்களுக்குச் சேவை புரியவும் ஆரோக்கியமான பொழுது போக்கை அளிக்கவும் ஏற்பட்டது. இதற்காக ரொம்பவும் உயர்தரமான நிகழ்ச்சிகளையே கட்டிக் கொண்டு அழுதால் சாமானிய மக்களுக்குச் சரிப்பட்டு வராது. ஒரு சமரசத்தை ஏற்படுத்திக் கொண்டு, சினிமா பாடல்கள், சாஸ்திரீய சங்கீதம், நாட்டுப்

பாடல்கள் போன்ற பலவற்றையும் ஒலி பரப்ப வேண்டியதுதான். சினிமா பாடல்களில் மிகவும் மோசமான பாடல்களை ஒதுக்கவும் வேண்டியதுதான்.

ஓரம்போ பாடல் எழுப்பிய சர்ச்சையிலிருந்து ஒரு நல்ல பயன் விளைந்திருக்கிறது. அந்தப் பாடலை ஒலிபரப்பாதது தவறு என்று பல நேயர்கள் எழுதியுள்ளார்கள். அப்பாடல் குற்றமற்றது என்கிறார்கள். அப்படி சொல்லும்போதே, 'படு ஆபாசமான பல பாடல்கள் ஒலிபரப்பப் படுகின்றனவே அப்படி இருக்கும் போது இந்தப் பாடலையும் ஒலிபரப்பினால் என்ன?' என்றுதான் கேட்கிறார்கள், கோபப்படுகிறார்கள். எனவே, அகில இந்திய ரேடியோ இன்னும் எச்சரிக்கையுடன் இருந்து கவிநயம் சிறிதும் அற்ற, ஆபாச உணர்வை ஊட்டவே திட்டமிட்டு எழுதப்பட்ட பாடல்கள் விஷயத்தில் இன்னும் கூடக் கண்டிப்புக் காட்டலாம் என்பது தான் பொறுப்புள்ள மக்களுடைய அபிப்பிராயம் என நாம் எடுத்துக் கொள்ளலாம்.

ஓரம்போ பாடல் விஷயத்தில் அகில இந்திய ரேடியோ தவறு செய்ததா, சரியாக நடந்து கொண்டதா என்று நாம் தீர்ப்புக் கூற விரும்பவில்லை. அப்பாடலில் கவிநயம் சிறிதும் இல்லை, இசை அம்சம் பூஜ்யம் என்று நினைப்பாரும் உண்டு; நாட்டுப்பாடல் வரிசையில் சேர்க்கப்படக்கூடிய சிறந்த பாடல், மக்கள் மனங்களைக் கவரும் இசை அம்சம் உள்ள பாடல் என்று சொல்வாரும் உண்டு.

எப்படி இருந்தாலும் ஓரம்போ பாடல் ஓர் ஆரோக்கியமான விவாதத்துக்கு வழி வகுத்திருக்கிறது. அந்த அளவில் நாம் மகிழ்கிறோம். இதில் சம்பந்தப்பட்ட அனைவருக்கும் நன்றி கூறுகிறோம்.

படாதிபதிகளிடம் பொறுப்புணர்ச்சி அதிகரித்தால் அகில இந்திய ரேடியோவின் வேலை எளிதாகிவிடும். அப்படி இல்லாத வரை அகில இந்திய ரேடியோ எச்சரிக்கையுடன் செயல்பட வேண்டியதுதான்.

# ஓரம்போ!-2

“ஆபாச அரசியலே ஓரம் போ!” என்கிறோம். “மாட்டேன்! நடுத் தெருவில்தான் செல்வேன்!” என்கிறது அது.

கூட இருந்தே குழி பறித்த கதையாக சரண் சிங் செய்த துரோகம் இன்று அம்பலத்துக்கு வந்துவிட்டது. அமைச்சரவையை விட்டு வெளியேறியவர், உள்ளே இருந்துதான் உடைக்க வேண்டும் என்று உணர்ந்தவராக மறுபடியும் வந்து சேர்ந்தார். ராஜ் நாராயண் இன்றித் தாம் மட்டும் திரும்பிவரச் சம்மதிப்பது போல நடித்தார்.

இவர் நடத்திய நாடகத்துக்கு ஒத்திகை பார்த்தது சிம்லாவில் என்று தெரிய வருகிறது. சென்ற மாதத் தொடக்கத்தில் சிம்லாவுக்குப் போய்க் கோப்புக்களைப் பரிசீலிப்பதாகக் கூறிவிட்டுச் சென்றவர், அங்கு ஆட்சியைக் கவிழ்க்க விரிவான திட்டம் தீட்டியிருக்கிறார். சிம்லாவில் ஆர். கே. அமினிடமும் தில்லி திரும்பிய பிறகு ராஜ் நாராயணனிடமும் திட்டத்தை விவரித்திருக்கிறார்.

அதன்படி ராஜ்நாராயண் ஜனதாவை விட்டு விலகி, நாடாளு மன்ற ஜனதாவில் பி. எல். டி. கோஷ்டியினரை ஒவ்வொருவராகப் பார்த்துப் பேசி,கட்சி சேர்த்திருக்கிறார். அதே நேரத்தில் சரண், ராஜ் நாராயண் குறித்து. 'நான் அவனுக்கு அப்பனில்லை அவன் எனக்குப் பிள்ளை இல்லை' என்பது போலத் துடைத்தெறிந்து பேசியிருக்கிறார். அதே சரண்சிங் இன்று ராஜ்நாராயண் ஆரம்பித்த செக்குலர் ஜனதாவின் தலைவராக வந்து உட்கார்ந்து கொண்டிருக்கிறார். இந்த மோசடிக் கும்பலுக்கு இந்திரா காந்தி தமது கட்சியின் ஆதரவு உண்டு என்கிறார். இந்த மானம் கெட்டவர்கள் அதை வேண்டாம் என்று மறுத்துக் கூறவில்லை. எமர்ஜென்சி காலக் கொடுமைகளுக்காக இந்திரா மீது நடவடிக்கை எடுக்கத் தாமதமாகிறது என்று குதியாய்க் குதித்த சரண் சிங், இன்று இந்திராவின் ஆதரவைப் பெற்றுக் கொள்ளத் துடியாய்த் துடிக்கிறார்.

சேச்சே! இதை விட ஆபாசமான அரசியல் உலகில் எங்கு தேடினாலும் கிடைக்காது!

சரண் சிங் மட்டுமா? மற்ற மந்திரிகள் என்ன வாழ்ந்தார்கள்? முதல் நாள் காங்கிரஸின் நம்பிக்கை இல்லாத் தீர்மானத்தை வன்மையாக எதிர்த்து, ஜனதா ஆட்சியை ஜகஜ் ஜோதியாக வர்ணித்த ஃபெர்னாண்டஸ் மறுநாளே மந்திரி பதவியை ராஜிநாமாச் செய்கிறார்.

இத்தனை அமர்க்களத்துக்கு இடையிலும், பகுகுணா போன பிறகும், ஜகஜீவன்ராம் உத்திராட்சப் பூனை மாதிரி இருந்து கொண்டு பிரதமர் பதவி தன்னால் வந்து தம் மடிமேல் விழும் என்று காத்திருக்கிறார். ஜெயப்பிரகாசரின் யோசனையை மொரார்ஜி ஏற்றால் இது நடக்கவும் கூடும்தான்.

இவ்வளவுக்கிடையில் அ. இ. அ. தி. மு. க. நாடாளுமன்ற உறுப்பினர்களுக்கு ஏகக் கிராக்கி. இருக்காதா பின்னே?

தேசிய அரசு, சிறுபான்மை அரசு என்றெல்லாம் லட்சிய வாசகங்களைக் கேட்கவும் படிக்கவும் நன்றாயிருக்கிறது. ஆனால் இவை தன்னலமற்ற தலைவர்களுக்கல்லவா சரிப்பட்டு வரும்? இங்கேயோ பிரதமராக விளங்க எல்லோருக்குமே ஆசை!

இந்தச் சூழலில் குடியரசுத் தலைவரின் பொறுப்பு மகத்தானதாகிறது.

'சுயநல அரசியலே ஓரம் போ!' என்று விரட்டவும், 'தேச நல அரசியலே ராஜ நடை போடு!' என்று வரவேற்கவும் மக்கள் தயாராயிருக்கிறார்கள்; தலைவர்கள்...?

# தியாக வல்லபன்

விக்கிரமன்

## அத்தியாயம் 20

## மகுடாபிஷேகம்

சந்திரப் பிரபா வந்து சென்ற சிறிது நேரத்துக்கெல்லாம் வல்லபன் அங்கு வந்தான். நெறியுடைப் பெம்மா தன் மனக் கவலை முகத்தில் பிரதிபலிப்பதை மாற்றிக் கொண்டாள்.

''அம்மா, சற்று முன்பு இங்கு யாராவது வந்து சென்றார்களா?'' என்று வல்லபன் கேட்டான்.

தாய் அவன் முகத்தையே உற்று நோக்கினாள். வேங்கியினின்று சந்திரப் பிரபா வந்து சென்றாள் என்பதை அவன் மறைக்க விரும்பவில்லை. தன் மகனுடைய மனத்தை மாற்ற முடியும் என்றே நம்பினாள்.

''ஆம், மகனே உனக்கு வேண்டியவர்கள் வந்தார்கள்'' என்று கூறிச் செல்வி மெல்லிய முறுவலை உதடுகளில் பிரதிபலித்தாள்.

வல்லபன் ஒரு கணம் திகைத்தான். அவனுடைய தீர்மானம் சரியாகத்தான் இருக்கும்.

''வேங்கியிலிருந்து சந்திரப் பிரபா வந்திருக்கிறாளா?'' என்று மிகுந்த பரபரப்புடன் கேட்டான்.

தன் மகனுடைய பரபரப்பைக் கவனித்த செல்வி, ''உனக்கு வேண்டியவர்கள் என்றவுடன் நீ அவளைக் குறிப்பிட்டது எனக்கு வியப்பை அளிக்கிறது'' என்றாள்.

''ஆம், தாயே! இந்த உலகத்தில் எனக்கு வேண்டியவர்கள் இருவர். ஒருவர் என்னைப் பெற்றெடுத்து உருவாக்கி, என் நலனையே என்றும் சிந்தனையில் கொண்டிருக்கும் தாங்கள். மற்றவள் — பல காத தூரத்தில் எனக்காகவே காத்திருக்கும் வேங்கி நாட்டு மங்கை சந்திரப் பிரபா. நாடும் ஊரும் அற்றவனாக நான் வேங்கிக்கு வந்தபோதே என்மீது நம்பிக்கை வைத்து, தன் இதயத்தைப் பறி கொடுத்தவள். எனக்கு வேங்கி கிடைக்கும் என்றோ, அல்லது சோழ நாட்டு இளவரசனாக ஆகும் பாக்கியம் பெறுவேன் என்றோ அவள் எதிர்பார்க்காமல் தன்னை என்னிடம் ஒப்படைத்தாள். அதனால் வேண்டியவர் என்றவுடன் அவள் நினைவு வராமல் வேறு யார் நினைவு வரும் தாயே?'' என்று உணர்ச்சிப் பெருக்கத்துடன் கேட்டான். பிறகு தொடர்ந்து, ''தாயே! அவள் எங்கே? வேங்கியினின்று என்னைத் தேடி வந்த அவள் என்னைக் காண எங்கெல்லாம் அலைந்தாளோ?'' என்றான்.

''என் மகன் வல்லபனைத் தேடிக் கண்டு பிடிப்பதில் சிரமம் ஏது? உனக்கு இளவரசுப் பட்டம் சூட்டும் விழா நாள் நெருங்க, நெருங்க, உன்னைப் பற்றி அறியாதார் இந்த நகரத்தில் யார் இருக்கப் போகிறார்கள்? கங்காபுரிக்குச் சென்று அங்கு நீ இல்லாததால் இங்கு தேடி வந்து விட்டாள்'' என்றாள் செல்வி.

வல்லபன் இருக்கையை விட்டு எழுந்து, ''தாயே, அவள் எங்கே? எங்கே தங்கியிருக்கிறாள்? உடனே நான் கண்டாக வேண்டும்'' என்றான் பரபரப்புடன்.

''அமைதி கொள் மகனே! உள்ளத்து உணர்ச்சியை வெளிக்கு உடனே புலப்படுத்திக்கொள்ளாமையும், எடுத்த முடிவை முகத் தோற்றத்திலிருந்து அறிய முடியாமையும் ஆட்சிப் பொறுப்பில் இருக்க வேண்டியவர்கள் தெரிந்து கொள்ள வேண்டிய கலை'' என்றாள் செல்வி.

''கடும் புயல் வீசும்போதும், கடல் கொந்தளிக்கும்போதும், சட்டமும் கட்டுப்பாடும் நிலைத்து நிற்குமா?'' வல்லபன் குரலில் பொறுமை யின்மை பொங்கி நின்றது.

''இளவரசுப் பதவியை ஏற்று மகிழ்ச்சிக் கடலில் திளைத்து நிற்கும் நீ புயல், கொந்தளிப்பு என்று பேசலாமா?'' என்று செல்வி கேட்டாள்.

''ஆம் தாயே, என் மனத்தில் புரிய முடியா வேதனை, நான் சூடப் போகும் மகுடம் முள் போல் தோன்றுகிறது. அணிக்கப்படும் உடைவாள் நாக சர்ப்பம் போல் காட்சியளிக்கிறது'' என்றான் வல்லபன்.

''மகவே என்ன நேர்ந்து விட்டது உனக்கு? உன்னைத் தேடி வந்த மகுடத்தை முள் என் கிறாயே?''

''ஆம் தாயே! என்னுடைய சுய சுதந்திரத்தைப் பறிக்கும் மகுடத்தை வேறு எப்படி அழைப்பேன்?''

''பொன் விளையும் நாடு, விஜயாலயர் வளர்த்த நாடு, அதன் இளவரசுப் பட்டம் சாதாரணமானதா? உன் சுதந்திரத்தைப் பறிக்கிறதா? உனக்கு மணம் முடிக்கத் திருக் கோவலூர் மலையமானும், முதல் அமைச்

''டாக்டர்! இந்த ஆளுக்கு சிறுகுடலையே காணோம்...''

''இந்த ஆளு அடிக்கடி பசியிலே சிறு குடலைப் பெருங்குடல் தின்னுதுன்னு சொல்லிட்டிருப்பாரே, அதனுலதான்!''

—முனேஹரன்





''சினி ஃபீல்டில் என்னென்ன அதிசயம் நடக்குது பார்த்தியா? பாட வந்தவன் நடிகனுகிறான்; நடிக்க வந்தவன் டைரக்டராகிறான்....''

''இது என்ன அதிசயம்? படம் தயாரிக்கப் போய் நான் ஆண்டியாகி விட்டேனே!''

—நா. ஜெயபாலன்

---

சர் நம்பியும் போட்டி போடும்போது பதவியின் முக்கியத்துவம் உனக்குத் தெரியவில்லையா?''

''தெரிந்துதான் சொல்கிறேன். நான் இளவரசன் என்றறிந்த மலையமான் தம் மகளைக் கொடுக்க முன்வருகிறார். ஆனால் நம்பி அவர்கள் என் பதவிக்காகத் தன் மகளை மணம் முடிக்க முன்வரவில்லை. ஆனால் நம்பியின் எண்ணம் ஈடேறவில்லை. அவர் தில்லை நகரை நோக்கிப் புறப்பட்டு விட்டார்'' என்று வல்லபன் கூறியவுடன், செல்வி திடுக்கிட்டு, ''பெருமான் நம்பி பழையாறையை விட்டுப் போய் விட்டாரா?'' என்று கேட்டாள். பிறகு, ''வல்லபா' சக்கரவர்த்தியின் முடிவுப்படி நான் நடக்க வேண்டும். நான் அவருக்கு வாக்குக் கொடுத்து விட்டேன்'' என்ருள்.

வல்லபன், தாய் கூறியதைக் கேட்டுக் கொள்ளாமலேயே, ''நான் சக்கரவர்த்தியிடம் கூறிவிட்டேன். திருமண விஷயத்தில் அவர் யோசனையை ஏற்க விரும்பவில்லை. சந்திரப் பிரபாவுக்குக் கொடுத்த வாக்கை நான் மீற விரும்பவில்லை....'' என்ருன்.

''வல்லபா! நான் கூறுவதைப் பொறுமையுடன் கேள். நான் சந்திரப் பிரபாவிடம் மனம் விட்டுப் பேசிவிட்டேன். சோழ நாட்டு இளவரசுப் பதவிக்குக் குறுக்கே அவள் நிற்க விரும்பவில்லை....'' என்று செல்வி கூறியபோது, வல்லபன் கோபக் குரலில், ''நீங்கள் என்ன சொல்லிவிட்டீர்கள்...'' என்று கேட்டான்.

''நான் எல்லாம் சொல்லி விட்டேன். என் மகன் வல்லபன் அரச குலத்து மங்கையை மணந்தாக வேண்டும் என்று கூறிவிட்டேன். அவள் மிகவும் குணமுடையவள். உண்மையிலேயே உன் நலனைத்தான் விரும்புகிறுள். சோழ நாட்டு இளவரசனுகப் போகும் பேறு பெற்றிருக்கிறுய் என்பது அவளுக்குத் தெரியாதாம்....''

''அம்மா, என்னைக் கேட்காமல் நீங்கள் அவளிடம் என்ன பேசினீர்கள்?''

''உன்னைக் கேட்காமலேயே, உன்னை இளவரசனுக ஆக்கும் முயற்சிக்கு ஆதரவு தந்து, வாக்குக் கொடுத்தேனே, அது போல்...''

''இது ஒரு பெண்ணின் வாழ்க்கையைப் பாதிக்கும் விஷயம்.''

''நானும் ஒரு பெண்தானே? வல்லபா? மற்றொரு பெண்ணுக்குத் தீங்கு செய்வேனு?''

''என்ன முடிவு எடுத்தீர்கள்?''

''வேங்கி மகள் மிக நல்லவள். அவள் வேங்கிக்குத் திரும்பவும் செல்லப் புறப்படுகிறுள்....''

''ஆ! என்னைப் பார்க்காமலே புறப்படுகிறுளா? அம்மா, இதைவிடக் கொடுமை எனக்குத் தாங்கள் செய்ய முடியாது. பெண் மற்றொரு பெண்ணுக்குத் தீங்கு செய்ய மாட்டேன் என்றீர்கள். வேங்கியிலிருந்து என்னைத் தேடி ஒரு பெண் தன்னந் தனியாகக் கங்கைகொண்ட சோழபுரம் வந்து, அங்கும் காணுமல், பழையாறைக்கு வந்து ஏமாற்றத்துடன் திரும்பிச் செல்கிறுள் என்ருல், அது ஒரு பெரிய தியாகமல்லவா?''

''இருக்கலாம். அவள் தனியாக வரவில்லை. அவளுடைய சகோதரர்களுடன் வந்தாள். தக்க வசதியுடன் வந்தாள். ஆனால் புரிந்து கொண்டு விட்டனர் அவளுடைய சகோதரர்கள். நீ சோழ நாட்டு இளவரசராகும் வாய்ப்பைக் கெடுக்க அவர்கள் விரும்பவில்லை.''

''ஒரு பெண்ணின் தியாகம் சாதாரணமானதல்ல. ஒரு கணமாவது அவள் என்னைச் சபிப்பாள்.''

''இல்லை; அவள் மகிழ்வுடன் செல்கிறுள். நான் அவளுக்கு ஒரு வரமும் கொடுத்துள்ளேன்....''

''தியாகம் செய்து உள்ளம் நொந்தவளுக்குக் கொடுக்கும் வரத்தால் என்ன பலன்?''

''மகத்தான பலன். உன்னை என்றும் அவள் உள்ளத்தில் ஏற்றி வைத்திருக்கும் உரிமையை அளித்தேன்.''

''அவள் உள்ளத்தில் என்னை அழிக்காமல் வைத்திருப்பதற்கு மற்றவர் உரிமை தர வேண்டுமா?''

''ஆமாம்; நீ சாதாரண குடிமகன் அல்லன்; அரச குடும்பத்தைச் சேர்ந்தவன். இப்போது இளவரசனுவதால் அரச குடும்பத்தைச் சேர்ந்தவனுகிறுய் என்று எண்ணி விடாதே. ஏற்கனவே நீ வேங்கியின் மன்னனுகும் உரிமை பெற்றவன். நீ யாரை மணக்க வேண்டும், யாரை நேசிக்க வேண்டும் என்று சொல்ல மற்றவருக்கு உரிமை உண்டு.''

''நான் விரும்பவில்லை. அப்படிப்பட்ட அரச குலத் தொடர்பு வேண்டாம்; பட்



டம் வேண்டாம்; பதவி வேண்டாம். நான் முன்பே முடிவு செய்து விட்டேன். எனக்கு இளவரசுப் பதவி வேண்டாம். சக்கரவர்த்தியிடம் என் முடிவைக் கூறிவிட்டேன். சந்திரப் பிரபா இல்லாத பதவியை நான் வேண்டேன்.''

''அவள் அரச குடும்பப் பெண் இல்லை வல்லபா!''

''தாயே! என்னை மன்னித்துக் கொள்ளுங்கள். நான் முடிவு செய்து விட்டேன். அதைத் தெரிவிக்கவே வந்தேன். வேங்கியிலிருந்து என் அபிமானவல்லி வந்திருப்பதைக் கேட்டவுடன் என் முடிவு உறுதியாகி விட்டது. தாயே, என்னைத் தவறாக நினைக்காதீர்கள். நல்ல வேளையாக இளவரசுப் பட்டம் சூட்டும் விழா நடைபெறவில்லை. வேறு தக்கவர் கிடைக்காமல் போய்விட மாட்டார்கள்'' என்று கூறி நிறுத்தி வல்லபன், தான் உடுத்தியிருந்த அரச குல உடைகளைக் களைந்து விட்டு, எளிய உடையை அணிந்து கொண்டு, தாயின் பாதங்களில் வீழ்ந்து வணங்கினான்,

பிறகு எழுந்து, ''தாயே! எனக்கு விடை கொடுங்கள். நான் சந்திரப் பிரபாவைச் சந்திக்க உடனே செல்ல வேண்டும். பல காத தொலைவிலிருந்து, சோழ நாட்டுக்கு வந்த திருமகளை உடனே திரும்பிச் செல்லுமாறு செய்வது நியாயமல்ல. நான் சென்று தடுத்து நிறுத்துகிறேன். இனி என் சுதந்திரத்தில் ஒருவரும் தலையிட்டுத் தடை செய்யமுடியாது'' என்றான். குரலில் கம்பீரம் இருந்தது.

செல்வி திடுக்கிட்டாள். ''வல்லபா, நான் சொல்வதைக் கேள். அருண்மொழித் தேவரும், மதுராந்தகரும் வகித்த மகத்தான இளவரசர் பதவியை ஒரு பெண்ணின் காதல் நிமித்தம் உதறித் தள்ளாதே'' என்றாள்.



வாயிற் கதவருகே சென்ற வல்லபன், திரும்பி வந்தான். ''தாயே! என்னை மன்னித்துவிடுங்கள் என்று மீண்டும் கேட்டுக் கொள்கிறேன். ஒரு பெண்ணின் தூய அன்பை விடச் சோழ நாட்டு இளவரசுப் பதவி பெரிதன்று. வருகிறேன்'' என்று கூறிவிட்டு, விரைந்து சென்றான், கங்கை கொண்ட சோழபுரம் நோக்கி.

சந்திரப் பிரபா வல்லபனை அங்கே எதிர் பார்க்கவில்லை. மீண்டும் வேங்கிக்குப் புறப் படுவதற்கு வேண்டிய ஆயத்தங்களைச் செய்து வர அவளது சகோதரர்கள் வெளியே சென் றிருந்தார்கள்.

வல்லபனைக் கண்டவுடன் சந்திரப் பிரபா ஒரு கணம் திகைத்தாள். அவளுக்குப் பேச நா எழவில்லை. மறு கணம் ஓடோடி வந்து, வல்லபன் தோள்களில் தன் முகத்தைப் புதைத்துக் கொண்டு விம்மினாள்.

''என்னை மறந்து விடுங்கள்...'' என்று கூறுவதற்குள் அவள் பட்ட பாடு....

வல்லபன் அவளது கூந்தலை மெல்லக் கோதியவாறு, ''சந்திரப் பிரபா, உன்னை எப்படி மறக்க முடியும்?'' என்று கூறினான்.

''மறந்துதான் ஆக வேண்டும். என்னை விட நாடு பெரிது.''

''அப்படி நான் நினைக்கவில்லை. எனக்கு நீதான் பெரியவள். இதயத்தில் அமர்ந்தவள். நான் இளவரசுப் பட்டத்தை நிராகரித்து விட்டேன்.''

வல்லபன் இவ்வாறு கூறியவுடன், தீயை மிதித்தவள் போல் சந்திரப்பிரபா அவனிட மிருந்து விலகி நின்றாள்.

''நான் தங்கள் தாயிடம் வாக்களித்துவிட் டேன். தங்கள் பதவிக்கு என்னால் இடையூறு வரக் கூடாது. நான் இங்கு வந்ததே பெரும் பிழை. நாளை நான் புறப்படுகிறேன். ஆனால், நான் — நான் தங்களை ஒரு நாளும் மறக்க மாட்டேன்'' என்று கூறித் தலையைக் குனிந்து கொண்டு விம்மினாள். இரு கரங் களாலும் முகத்தை மூடிக் கொண்டாள்.

''சந்திரப் பிரபா! நானும் உன்னுடன் வேங்கிக்கு வருகிறேன்... எப்படியும் வேங்கி யின் அரியணை எனக்கு உறுதி. நீ அரசியாவ தும் உறுதி'' என்றான்.

''தாங்கள் என்னுடன் வரக் கூடாது: உங்கள் தாயிடம் கையடித்துச் சத்தியம் செய்து கொடுத்திருக்கிறேன்'' என்று அவ னைத் திரும்பிப் பாராமலேயே பேசினாள்.

''சந்திரப் பிரபா! நான் என் முடிவைச் சக்கரவர்த்தியிடம் தெரிவித்து விட்டேன்; என் தாயிடமும் கூறிவிட்டேன். நான் உன்னுடன் வருவது உறுதி. பதவி எனக்குத் துரும்பு...'' என்று கூறிக் கொண்டிருக்கும் போது, வெளியே, யாரோ வரும் அரவம் கேட்டது.

சந்திரப் பிரபா தங்கியிருந்த குடிலின் வெளியே சிவிகை வந்து நின்றது. குதிரை களில் வீரர்கள் வந்து இறங்கினார்கள். அலங்கரிக்கப்பட்ட தேர் வந்து நின்றது. இரட்டைக் குதிரைகள் பூட்டப்பட்டிருந்தன.

குதிரைமீதிருந்து திருச்சிற்றம்பலமுடை யார் பெருமான் நம்பி பல்லவரையர் இறங்கி, வல்லபனை நோக்கி வந்தார்.

''இளவரசே! தங்களை எங்கெல்லாம் தேடு வது? புறப்படுங்கள்; புறப்படுங்கள், மிக அவசரம்....'' என்றார். அவர் முகம் வாடியிருந்தது. அருகே நின்ற வீரர்கள் தலையைத் தாழ்த்தியவாறு நின்று கொண் டிருந்தனர்.

வல்லபன் திகைத்தவாறு நின்றான். ''நான் இளவரசன் அல்லன். வல்லபன் என்றே என்னை அழைத்தால் போதும்'' என்றான்.

நம்பி அவன் கூறியவற்றைக் காதில் போட் டுக்கொள்ளவில்லை.

''இளவரசே! நாம் எதிர்பாராதது நடந்து விட்டது. நேற்று எனக்குச் செய்தி வந்தது. சக்கரவர்த்தியின் உடல்நிலை மோசமாகிவிட் டது என்று கேள்விப்பட்டவுடன் நான் புறப் பட்டுப் பழையாறைக்கு வந்தேன். நான் மனத்தாங்கலுடன் புறப்பட்டது எவ்வளவு பெரிய தவறு என்பதை இப்போது உணர் கிறேன். இளவரசே! சோழ நாட்டுக்குக் கைம்மாறு கருதாப் பணிகள் பல செய்துள் ளேன். அரசர் வேறு நான் வேறு என்று கருதியதே இல்லை. ஆனால், கடைசியில் சோழர் குடும்பத்துடன் மணத் தொடர்பு கொள்ளவில்லையே என்ற எண்ணத்தில், மாதண்ட நாயகர் பதவியையும் முதல் அமைச்சர் பதவியையும் துறந்து, சிதம் பரத்திலேயே தங்கிவிட முடிவு செய்து புறப் பட்டு வந்து விட்டேன். தாங்களும், வேங்கி மகளை மணம் புரிந்து கொள்வதில் பிடி வாதம் காட்டினீர்கள். இளவரசர் பதவி யைத் தியாகம் செய்து விட்டீர்கள். சக்கர வர்த்தி இதை அறிந்தவுடன் மிக அதிர்ச்சி அடைந்து விட்டார். எதைச் செய்யக் கூடாது என்று கேசவ சுவாமி தடுத்திருந் தாரோ அதைச் செய்தார். உடல் நிலை திடீரென்று மோசமாகியது. இதய வலி ஏற்பட்டது. நான் வந்து சேர்ந்தவுடன் என் மடியில் தம் தலையை வைத்துக் கொண்டு ஓரிரு வார்த்தைகள்பேசிய பிறகே உயிரை நீத்தார். அவரது கடைசிச் சொற்கள் தங்கள் இளவரசுப் பட்டத்தைக் குறித்ததே. காதலுக்காகத் தாங்கள் தியா கம் செய்ததை நான் அறிவேன். தியாக



நானும் என் நண்பனும் ஓட்டலுக்குப் போனோம். பில்லை ஆளுக்குப் பாதியாகக் கொடுப் போம் என்றான். ஒத்துக் கொண்டேன். சர்வரிடமிருந்து பில்லை வாங்கிக் கொண்டு கேஷி யரிடம் போனதும் பில்லைச் சரி பாதியாகக் கிழித்து என்னிடம் பாதியைக் கொடுத்தான். அந்த பாதியிலிருந்த தொகை ரூபாய் 3. அவனிடமிருந்த மறுபாதி யோ...? 30 காசை பவ்வியமாக எடுத்து நீட்டினானே பார்க்க லாம்! அசடுவழிய மூன்று ரூபா யைக் கொடுத்து விட்டு வெளி வந்தேன்.

- கோவி. பரஞ்சோதி

வல்லபனுடன் தாங்கள் மற்றொரு தியாகம் செய்துதான் ஆக வேண்டும். தாங்கள் இப்போது சோழ நாட்டின் இளவரசர் மட்டும் அல்லர். சோழ நாட்டின் சக்கர வர்த்தி. இராசாதி ராசர் என்ற பெயரைத் தங்களுக்குச் சூட்டி, சோழ மாமன்னராக ஆக்க கேசவ சுவாமிகள் யோசனை கூறி விட்டார்கள்.....'' என்று நம்பி கூறி வரும்போது, வல்லபன், ''ஆ! சக்கரவர்த்தி இறந்து விட்டாரா?'' என்று அலறினான்.

''இளவரசே! தங்களுக்கு உடனே இளவர சர்க்குரிய மகுடத்தைச் சூட்ட வேண்டும். இராஜராஜருக்கு இறுதிச் சடங்குகள் செய்த பிறகு, தங்களுக்கு நல்லதொரு நாளில் மகு டாபிஷேகம் செய்ய வேண்டும். இராஜராஜ ரின் புதல்வருக்கு இளவரசுப் பட்டம் சூட்ட வேண்டும். முன்பு தாங்கள் எடுத்துக் கொண்ட உறுதியை மறந்திருக்க மாட்டீர்கள் என்று நினைக்கிறேன். இன்று இளவரசுப் பட்டம் சூடப் போகும் குழந்தை வளர்ந்து தக்க வயதடையும்போது நாட்டை அவனிடம் ஒப்படைத்து விட வேண்டும். உம், புறப் படுங்கள்'' என்றார்.

பேரதிர்ச்சி தரும் மன்னரின் மரணம் தரும் அதிர்ச்சிச் செய்தியை அறிந்த நிலையிலும் வல்லபன் ஒன்று கேட்டான்:

''சின்னஞ்சிறு இளவரசர் பட்டமேற்பு விழாவில் அவனுக்கும் திருமணத்தை நடத்தி வைக்க வேண்டுமல்லவா? அரச குடும்பப் பெண் எங்கு பிறந்திருக்கிறாள் என்று தேடிப் பார்க்க வேண்டியது நமது கடமை. எனக்கு ஏற்பட்டது போன்ற பிரச்சினை சிறுவனுக்கு ஏற்படாது!'' என்றான், சிறு முறுவலுடன்.

''இளவரசே! விவரித்துக் கொண்டிருக்க நேரமில்லை. சக்கரவர்த்தியின் உடலைத் தைலமிட்டுப் பாதுகாத்து வைக்கச் சொல்லி இங்கு விரைந்து வந்திருக்கிறேன். உடனே புறப்படுங்கள்'' என்றார்.

''நான் வேங்கிக்குப் புறப்படத் திட்ட மிட்டிருக்கிறேன்'' என்றான் வல்லபன்.

''தெரியும். தங்கள் தாய் எல்லாம் கூறினார்கள். நீங்கள் புறப்பட்டு வந்தவுடன் தங்கள் தாய் அதிர்ச்சி மிக அடைந்து படுத்த படுக்கையாயிருக்கிறாள். சோழநாடே தங்களை எதிர்பார்க்கிறது'' என்று துரிதப்படுத்தினார்.

''அமைச்சரவர்களே! நான் வேங்கி மக ளுக்குக் கொடுத்த வாக்கு என்னாவது?'' என்று வல்லபன் கேட்டான்.

நம்பி பெரிதாகச் சிரித்தார். கூடத்தில் அங்கு நடப்பனவற்றைக் கவனித்தவாறு நின்று கொண்டிருந்த சந்திரப்பிரபாவைப் பார்த்தவாறு, ''வேங்கி மகளை மறந்து விடு மாறு நான் சொல்லவில்லை. நமது சக்கர வர்த்தி ராஜராஜன் முப்பாட்டனார் ராஜ ராஜ சோழ தேவர் பட்டத்து அரசியாக அரச குல மங்கையை ஏற்றார். அதனால் தான் காதலித்த இன்பவல்லியை மறக்கவில்லை. அபிமான வல்லியாக அவள் ராஜராஜரின் இதயத்தில் என்றும் வீற்றிருந்தாள். அர சர்கள் ஒன்றுக்கு மேல் பல பெண்களை மணப் பது மரபுதானே?'' என்று நம்பி கூறி சந்திரப் பிரபாவைப் பார்த்து, ''வேங்கி மகளே!



அனைத்திந்திய தமிழ் எழுத்தாளர்கள் சங்கக் கூட்டத்திற்குச் சென்றிருந்தேன். அங்கே பின் வரிசையில் ஒரே ஒரு பெண் மணி மட்டும் தனியாக அமர்ந்திருந்தார். அவர் ஏன் அப்படி தனியாக அமர்ந்துள் ளார் என என் நண்பனைக் கேட்டபோது அவன் சொன்னான்: ''அவர் எழுத்தாளர் உலகில் ஒரு தனி இடம் பிடித்தவராக இருக்கலாம்!''

—பூண்டி

நீதான் இப்போது சொல்ல வேண்டும். உன்னை இவர் மறக்கவே மாட்டார். சோழ நாட்டு அரசராகப் போகும் இவருக்கு நல்லயோசனை கூறம்மா'' என்றார். பிறகு, ''இளவரசே! தாமதப்படுத்தாதீர்கள். நீங்கள் பழையா றைக்கு வந்துதான் சக்கரவர்த்திகளின் இறு திச் சடங்குகள் ஆக வேண்டும். பழையாறை நகரமே தங்களை எதிர்நோக்குகிறது. காதலுக் காகப் பதவியைத் துறக்க முற்பட்ட தியாக வல்லபனைக் காண அவர்கள் காத்திருக்கி றார்கள். தியாகவல்லபன் இராசாதிராசனாக மாறி மக்களுக்குத் தொண்டு செய்ய வேண் டாமா?'' என்று மிக உருக்கமாகக் கேட்டார்.

வல்லபன் சந்திரப்பிரபாவை நோக்கினான். அவள் சைகை மூலம் இதயத்தைச்சுட்டிக் காட்டி, ''என்றுமே என் இதயத்தில் இட முண்டு; சக்கரவர்த்தியானதும் தாங்கள் என்னை மறந்து விடக் கூடாது'' என்றாள்.

''பெண்ணே! வல்லபன் உன்னை மறக்க விட மாட்டேன்'' என்றார் நம்பி.

வல்லபன் நம்பியின் கரங்களைப் பிடித்துக் கொண்டு, ''அமைச்சர் பெருமானே! தங்கள் வேண்டுகோளை ஏற்கிறேன். தங்களுடைய பக்கபலம் இருந்தால்தான் நான் சோழ நாட்டின் மாபெரும் பொறுப்பை ஏற்பேன். தியாகவல்லபனாகவே என் பெயர் என்றும் விளங்கக் காதலையும் தியாகம் செய்யத் துணி வதே சோழ நாட்டுக்காகத்தான்'' என்றான்.

நம்பி அந்தத் துயரம் நிறைந்த வேளையில் பெரிதாக நகைத்து, ''தியாகவல்லபன், என்ற பெயர் ஒரே ஒரு காரணத்துக்காகத் தான் தங்களுக்கு ஏற்படும். இளவரசர்ப் பதவியைத் துரும்பாக எண்ணி உதறி விட்டுப் புறப்பட்டீர்களே அதற்காகத்தான். காத லில் தியாகம் செய்ய நான் அநுமதிக்க மாட் டேன். இராசாதி ராசனாக பழையாறையில் மகுடாபிஷேகம் செய்து கொண்ட பிறகு, வேங்கி மகள் சந்திரப் பிரபாவையும், கங்கா புரி அரண்மனை அந்தப்புரத்தில் அழைத்து வந்து அமர்த்தி விடுவேன்'' என்றார்.

தியாகவல்லபன், சந்திரப்பிரபாவிடம் 'விரைவில் சந்திப்பேன்' என்று விடைபெற் றுக்கொண்டு பழையாறை 'நோக்கிவீரர்கள் புடைசூழ, இருச்சிற்றம்பலமுடையார் பெரு மான் நம்பி பல்லவரையர் உடன் வர மகுடம் ஏற்கப் புறப்பட்டான். (முற்றும்)

# இனி பானு உறங்கட்டும்

ஏ.வி.எம். ஜகணேஷ்

ஸிபுரியும் பாவையர் விடுதி. அதாவது 'வொர்க்கிங்' வுமன்ஸ் ஹாஸ்டல். வெளி வானத்தின் வெளிர்நிறப் பொதிகளை வெறித்துப் பார்த்துக் கொண்டிருக்கிறாள் நீரஜா.

இந்த உலகமே பாலைவன மேடுகளாக — விதவையின் வெற்று நெற்றியாக வெறிச்சோடித் தோன்றத் தன்னைத் தனிமையில் அமிழ்த்தி விட்டுச் சென்ற பானுவின் முடிவு அவளுக்குப் புதிராகத் தோன்றியது.

இரண்டாண்டுகளுக்கு முன்பு — கழுத்து வரை இழுத்துப் போர்த்திய முந்தானையுடன் ''ஸிஸ்டர்... உங்கள் அறையில் எனக்கு ஒரு 'பெட்' ஒதுக்கியிருக்கிறார்கள்'' என்ற வார்த்தைகளை வெட்டி வெட்டிச் சொன்னவாறே அவள் அறைக்குள் நுழைந்த அந்தப் பானு குறுகிய கால கழற்சிக்குள் அவளின் அந்தரங்கத் தோழியாக மாறிவிட்ட அவள் —

ஒரு வார லீவில் ஊருக்குச் சென்று ஏன் தற்கொலை செய்து கொள்ள வேண்டும்?

சற்று இறுக்கமாக ஜாக்கெட் அணிவதைக் கூட விரும்பாத பானு கருக்குக் கயிற்றைத் தன் கழுத்தில் எப்படி இறுக விட்டுக் கொண்டாள்?

எண்ணம் 'பிள்ளைப் பூச்சியாக'ச் சிந்தனையைக் குடைகிற போது....

''அம்மா உங்களுக்குக் கடுதாசி...''

ஆயா நீட்டிய வெள்ளை நிற நீள உறையைப் பெற்றதும் நீரஜாவின் கரங்கள் நடுங்குகின்றன.

வீசி எறிந்த பாதரசத்துளிகள் போன்று குன்றுமணியான அந்த எழுத்துக்குரியவள் பானு அல்லவா?

உறையை நடுங்கும் விரல்களால் பிரித்தாள் நீரஜா. அதனுள்ளே இரு கடிதங்கள். முதல் கடிதம்....

''டியர் நீ....''

'Love Is immoral' என்றெண்ணினேன். ஆனால் அவன், அது பேருந்து நிலையத்தில் தொடங்கி, கடற்கரை இருட்டில் வளர்ந்து, மஹாபலிபுரத்து ஹோட்டல் அறையின் நான்கு சுவர்களுக்குள் முடிந்து விடுகிறது என்று நிரூபித்து விட்டான். மூன்று முடிச்சுக்கு முன்பே மூன்று மாதம் முழுகாததன் விளைவு ஒரு முழுக்கயிறு. அவன் பிரகாஷ் — எழுதிய கடைசிக் கடிதமும் புகைப்படமும் இத்துடன் அனுப்பியுள்ளேன். — பானு.

இரண்டாவது கடிதத்தைப் பிரிக்கும்போது 'பாஸ்போர்ட்' சைஸில் அவனுடைய புகைப்படம் நழுவிக் கீழே விழுகிறது. அதை எடுக்காமல் கடிதத்தை விறுவிறுப்பாக நோக்குகிறாள் நீரஜா.

''டியர் பானு''

காதலித்தவளைக் கல்யாணம் செய்ய வேண்டும் என்ற சங்க கால ஃபார்முலாவை நான் பின்பற்றி இருந்தால் நீ என்னுடைய ஆறாவது மனைவியாகத்தான் அமைய வேண்டி வரும். மூன்று மாதம் என்று அழுகிறாய். 'டெஸ்ட் டியூப் பேபி' பிறந்து கொண்டிருக்கிற விஞ்ஞான உலகில், கருச்சிதைவுக்குச் சட்டப் பாதுகாப்பு கிடைத்து விட்ட நாகரிக உலகில், வயிற்றைப் பெரிதாக்கிக் கொண்ட உன்னுடைய தவற்றுக்கு என்னைப் பொறுப்பாக்குவது முட்டாள்தனம்'' — பிரகாஷ்.

கீழே கிடந்த புகைப்படத்தை எடுத்த நீரஜா திடுக்கிட்டாள்.

அவன் — பிரகாஷ் — தினமும் அவள் ஆபீசுக்குச் செல்லும் போது பஸ் ஸ்டாப்பில் நின்று கொண்டிருக்கும் ரோட்டுப்புற — ரோமியோ...புடவைகளை ஊடுருவும் எக்ஸ்ரே விழிகளின் சொந்தக்காரன் ... நீரஜாவின் அலுவலக மாடியில் உள்ள ஒரு திரைப்படக் கம்பெனியின் பிரதிநிதி ...

ச...பானு... நீ இவனிடமா ஏமாந்தாய்?

பானு ... நீ இறந்து விட்டாய்... உன்னுடைய ஆன்மா சிகரெட் புகையாகச் சிதைந்து விட்டதாக அவன் கருதிக் கொண்டிருப்பான். ஆனால் களங்கமில்லா — உன் மனத்துக்கு — நம் நட்புக்கு — நான் காணிக்கை செலுத்தியாக வேண்டும்... அதற்காக..

எக்ஸ்கியூஸ் ... மீ பானு
நான் உன்னுடைய காதலனைக்
காதலிக்கப் போகிறேன்...

டேய் பிரகாஷ்... உன்
டைரியில் — 'நீரஜா
ஏழாவது காதலி''
என்று எழுதிக்
கொள் ....
ஆமாம்
நான்



உன்னைக் காதலிக்கப் போகிறேன்... உன்னால் முடிந்தால் என்னை ஏமாற்றிப் பார்!

அவனுடைய கடிதத்தையும் புகைப்படத்தையும் ஆத்திரம் தீருமட்டும் கிழித்து ஜன்னல் வழியே விட்டெறிந்தாள்.

மறுநாள்...

பஸ் ஸ்டாப்பை நெருங்கியதும் ஆங்காங்கே நின்று கொண்டிருக்கும் மனிதக் கானான் கஜன் அவன் விழிகள் பிரகாஷைத் தேடும் போது, 'ஹாட் பேண்ட்டுக்குக் கீழே தங்கக் கம்பங்களாகப் பளபளத்துக் கொண்டிருக்கும் ஆங்கிலோ-இந்திய பெண்ணொருத்தியின் கால்களை அவன் பார்வையில் விழுங்கிக் கொண்டிருந்தான்.

அவனை உற்றுப் பார்க்கிறாள் நீரஜா.

மேகமெனப்புரளும்ஸ்டெப் கட்டிங். பெல்லையும் சிலாக்கையும் இணைக்கும் இடையில் நாகப்பாம்பு பெல்ட். பூங்காவின் புல் வெளியைத் தோட்டக்காரன் ஒழுங்காக வெட்டி விட்டது போன்ற மீசை. கைகளில் வி.ஐ.பி. கேஸ். முகத்தில் குறும்பான அறுவறுப்புப் புன்னகை.

'டேய், பிரகாஷ். நீ இவைகளைக் காட்டித் தானே ஆறு பேரை ஏமாற்றினாய்... என்னையும் ஏமாற்றிப் பாரேன்?'

நீரஜா தலைக்குத் தானே சொல்லிக்கொள்ளும் போது பஸ் வந்தது. அவள் ஏறி முன் பக்கம் போனாள். அவன் ஏறி வழக்கம்போல் பின்பக்கம் நின்றான்.




அலுவலகம்....

டைரக்டரியைப் புரட்டிப் பிரகாஷின் டெலிபோன் நம்பரைக் கண்டு பிடித்துச் சுழற்றினாள் நீரஜா.

''கௌரி பிலிம்ஸ் பிரகாஷ் ஹியர்.''

எத்தகைய அலட்சியமான உச்சரிப்பு. ஒரு நிமிடம் தயங்கினாள் நீரஜா.

''ஹலோ... ஹலோ...'' அவன் பரபரத்தான்.

''அவ்வளவு அவசரமா உங்களுக்கு?'' — அவள் கெக்கெலித்தாள்.

''ஹலோ நீங்கள் யார்?''

''மரியாதை எனக்குப் பிடிக்காது...''

''இஸ் இட்... ஹலோ நீ யார்...''

''உங்களைப் பதினைந்து நாட்களாக பாலோ பண்ணிக் கொண்டிருக்கும் ஒரு பதினைந்து வயது....''

''பெயர்...?''

''வருங்கால மிஸஸ் பிரகாஷ்..''

''குட். என் பெயர் உங்களுக்கு — சாரி — உனக்கு எப்படித் தெரியும்?''

''உங்கள் கையிலிருக்கும் வி.ஐ.பி. கேஸில் — ஸ்டிக்கரில் பொறித்து ஒட்டியிருக்கிறீர்களே...''

''வெரி ஹேப்பி... ஹனி.... நீ எப்போது என்னைச் சந்தித்தாய்.....''

''தினமும் உங்களை — உங்களுக்குத் தெரியாமல் சந்தித்துக் கொண்டிருக்கிறேன் டியர்...''

''ஓ.கே. நான் உன்னை எப்போது சந்திப்பது...?''

''சந்திப்பது இருக்கட்டும் ...முதலில் ஒரு கோரிக்கை...''

''சொல் டார்லிங்....''

''சொன்னால் கேட்பீர்களா.?''

''நிச்சயமாக....''

''இந்த 'ஸ்டெப் கட்டிங் ஹேர் ஸ்டைல்' உங்களுக்குப் பொருத்தமாகவா இருக்கிறது? அதுவும் மண்டையைப் பிளக்கிற வெயில் காலத்தில் பாகவதர் மாதிரி முடி எதற்கு?''

''நாளைக்கே 'சம்மர்—கிராப்' அடிச்சிடுறேன்... நாம் எப்போ மீட் பண்ணலாம்?''

''முதலில் சம்மர்கிராப் அப்புறம்...''

அவள் திடீரென்று பேசுவதை நிறுத்தினாள். 'ஹலோ, ஹலோ' என்று கத்தினான் அவன். அவள் மௌனமாக இருந்தாள்.

''போனில் சிக்கிய ஏழாவது 'காதலி' அதற்குள் பறந்து விட்டதே...''

அவன் தனக்குத் தானே சொல்லிக் கொண்டது தெளிவாகக் கேட்டது. டெலிபோனைத் துண்டித்து விட்டு அவள் தனக்குத் தானே சொல்லிக் கொண்டாள், ''பறக்கலைடா...பாய்வதற்காகப் பதுங்குகிறது.''

அடுத்த நாள்....

வழக்கம்போல் ஒன்பதரை மணிக்கு பஸ் ஸ்டாப்பிற்கு வந்த நீரஜாவிற்குத் கன்னையும் மீறிச் சிரிப்பு வந்தது.

சம்மர் கிராப்புடன் கையில் வி.ஐ.பி. பெட்டியுடன் அப்பாவியாக நின்று கொண்டிருக்கிறான் பிரகாஷ். அவனுடைய விழிகள் புடவைக்கூட்டங்களில் தன் ஏழாவது காதலியைத் தேடிக் கொண்டிருந்தன.

---

ஒட்டகச் சிவிங்கிக்குக் கழுத்தில் சுளுக்கு பிடிக்கும் போது-
யானைக்கு ஜலதோஷம் பிடிக்கும் போது-
கால்நடை மருத்துவருக்கு சோதனையான கட்டங்கள்!
—சாமி



அவளை மீண்டும் பார்த்தாள் நீரஜா.

''டேய் ... பிரகாஷ் உனக்கு எதுக்குடா மீசை... அதையும் எடுக்கிறேன் இன்று....''

பஸ் வந்தது. அவள் ஏறி முன்பக்கம் போனாள். அவனும் ஏறி வழக்கம் போல் பின்பக்கம் நின்றான்.

அலுவலகம் ... டெலிபோனைச் சுழற்றினாள் நீரஜா.

''கௌரி பிலிம்ஸ் பிரகாஷ் ஹியர்.''

''தேங்க்...யூ...டியர்...''

''ஓ...யூ...? குட்மார்னிங் ஹனி...''

''நான் சொன்ன உடனே சம்மர் கட்டிங் பண்ணிட்டீங்களே... வெரிகுட்...''

''உனக்காக முடியை என்ன? தலையை வெட்டச் சொன்னாலும் வெட்டிக்கறேன்.''

''டியர்...உங்களுக்கு ஒன்று சொல்லட்டுமா...?''

''சொல் டார்லிங்....''

''உங்கள் உதடுகள் எப்படி அத்தனை சிவப்பாக இருக்கின்றன?''

''அந்த ரகசியத்தைச் சொல்லட்டுமா?''

''சொல்லுங்கள் டியர்....''

''ஒரு நாளைக்கு இரண்டு பாக்கெட் வில்ஸ் பில்டர்கள் குடிக்கிறேன். அதனால்தான்.''

''பட் ஒன் திங் டார்லிங்... உங்கள் அதரங்களுக்கும் மீசைக்கும் தொடர்பே இல்லை.... மீசை மட்டும் இல்லையென்றால் உங்கள் உதடுகள் ஆரஞ்சுச் சுளைகள்தான்...''

''என்னைப் பற்றி இவ்வளவு வர்ணிக்கிறாயே டார்லிங், உன்னைப் பற்றி...''

''சொல்லட்டுமா. 32''—22'''32'' . வயது பதினாறு ஆண்டுகள். இரண்டுமாதங்கள் மூன்று நாட்கள், நான்கு மணி, ஐம்பது நிமிடம் பத்து நொடிகள்....''

''ஹா...ஹா... ரியலி யூ. ஆர். இன்ட்ரஸ்டிங்... டியர் எனக்கு இப்போது நீ வேண்டும்...''

''நிச்சயம் நான் உங்களுக்குத்தான்....''

''நீ கொஞ்சிக் கொஞ்சிப் பேசுகிறாய்... எப்போது காட்சி தருவாய்?''

''நாளைக்கு வழக்கம்போல் உங்களுக்காக பஸ் ஸ்டாப்பில் காத்திருப்பேன்.''

''அடையாளம்...?''

''உங்களுக்கு என்ன கலர் பிடிக்கும்?''

''கிளிகள் பிடிக்கும். அதனால் பச்சைக் கலர் ரொம்ப பிடிக்கும்.''

''ஓ.கே. நாளைக்குப் பச்சைப் புடவை பச்சை பிளவுஸில் பஸ் ஸ்டாப்பில் காத்துக் கொண்டிருப்பேன்.'' தன் காதல் அத்தியாயத்தின் இரண்டாவது அத்தியாயத்தைப் புரட்டி முடித்தாள் நீரஜா.

மறுநாள்.

பச்சை வார்ப்பாக பஸ் ஸ்டாப்பில் நின்று கொண்டிருக்கிறாள் நீரஜா.

அவசர அவசரமாக வருகிறான் பிரகாஷ். அவன் முகத்தில் மீசையைக் காணோம். அடபாவி! ஒரு பெண் சொன்னாள் என்பதற்காக உரித்த கோழியாக வந்து நிற்கிறாயே... முட்டாள்.

பஸ் ஸ்டாப்பில் கூட்டம் அலைமோதுகிறது.

பச்சையைத்தேடி அலைந்த அவன் வறட்சிக் கண்கள் நீரஜாவைக் கண்டதும்,...

''ஹலோ...டியர்....''

அவளை நோக்கிக் கரங்களை நீட்டினான்.

''யாருடா...நீ?''

ஸ்டாப்பில் இருப்பவர்கள் அனைவருக்குமே கேட்கும் வண்ணம் குரலைக் கரகரப்பாக்கி உயர்த்திக் கூறினாள் நீரஜா.

வெலவெலத்துப் போனான் பிரகாஷ்.

''ஏண்டா! உங்களுக்கெல்லாம் சிஸ்டர்ஸ் கிடையாது? ஒரு பொண்ணு தனியா நின்னிருந்தா என்னவேணாலும் செய்றதா. பல்லை உடைச்சிடுவேன். ஸ்கௌண்ட்ரல்ஸ். ஸ்டுபிட் ராக்ஸ்.''

அனைவருடைய கவனமும் அவர்களை நோக்கித் திரும்புகிறது. அவனவன் பார்வையில் ஆயிரம் வினாக்கள். ஆனால் எவனுமே பிரகாஷை ஒரு தட்டு கூட தட்டாதது நீரஜாவுக்குப் பெருங்குறையாக இருந்த போது பஸ் வந்தது. அவள் ஏறி முன்பக்கம்போனாள். ஆனால் அவன் ஏறவில்லை.

**அ**லுவலகம்... டெலிபோன் எண்களைச் சுழற்றினாள். சிறிது நேரம் டெலிபோன் மட்டும் அலறிக் கொண்டிருந்தது. பின்பு,

''கௌரி பிலிம்ஸ் ஹியர்.''

உயிரற்றுக் கூறினான் பிரகாஷ். கௌரி பிலிம்ஸ் பிரகாஷ் ஹியர் என்ற வழக்கமான பந்தா இல்லை.

''மிஸ்டர் பிரகாஷ் ப்ளீஸ்.''

''அம்மா தாயே. ஆளை விடு.''

''பிரகாஷ் டியர். உண்மையிலே நான் ரொம்ப வருத்தப்படுகிறேன். உங்களைச் சந்திக்கப் பச்சைப் புடவையுடன் வருவதற்குக் கொஞ்சம் லேட்டாயிட்டது. ஆனால் அதற்குள் நீங்கள் ஆமாம், எனக்கு வயது பதினாறுன்னு சொல்லியிருந்தேனே. உங்களோட சகோதரிகளின் கணக்கைக் கேட்ட அந்தக் கண்ணடிக்கு வயது பதினாறுதான் இருக்குமா?''

''நடந்தது எல்லாம் வேடிக்கை பார்த்தியா?''

''நோ...டியர்...நோ... வேதனைப்பட்டேன். படுகிறேன். டியர்... இனி மேலும் உங்களை ஏமாற்ற விரும்பவில்லை. இன்று எப்படியும் உங்களைச் சந்திப்பதென முடிவு எடுத்து விட்டேன்.... பிரகாஷ்.... இன்று ஏழு மணிக்குத் தேவி தியேட்டர் பஸ் ஸ்டாப்பில் உங்களுக்காகக் காத்துக் கொண்டிருப்பேன்....''

''இரு... ஆனால் ஒரு கண்டிஷன். 'பச்சைப் புடவையிலே இருப்பேன்... கண்டுபிடி'ன்னு சொல்லாதே. நான் சரியா ஏழு மணிக்கு வந்துடுவேன். நீதான் என்னிடம் வந்து பேச வேண்டும்.''

''ஓ. கே.''

கடைசி முறையாக அவன் அட்ரீஸ்ட் கேட்டுக் கொள்ளவாவது செய்யட்டும் என முத்தத்தின் சத்தத்தைத் தொலைபேசி மூலம் அனுப்பி வைத்தாள் அவள். அவன் உருகிக் கொண்டிருந்தான்.

**ம**ணி ஏழு.

நீரஜா நன்றாக டிரஸ் செய்து கொள்கிறாள். தீபாவளிக்குப் புத்தாடை உடுத்துவது போல.



'எல்விஸ் பிரஸ்லி' உபயோகித்த ஒரு ஜெட் விமானத்தை விற்கப்போகிறார்கள். இந்த விமானத்தில் ஒரு கான்ஃபரன்ஸ் ரூம், இரண்டு படுக்கையறைகள், ஒரு டிரஸ்ஸிங் ரூம், ஷவர் உள்ள பாத்ரூம் எல்லாம் இருக்கின்றன. இதன் விலை மூன்று கோடி ரூபாய்!

'இந்தியா டுடே' —ராகமாலிகா

---

ஹாஸ்டலில் இருந்து பஸ்ஸைப் பிடித்து மவுண்ட் ரோடு அஞ்சல் நிலையத்தில் இறங்கும் போது மணி 7.20.

தேவி தியேட்டர் பகுதிக்குச் செல்லாமல், எதிர் வரிசை பிளாட்பாரத்தில் நடக்கிறாள். பஸ் ஸ்டாப்பைப் பார்க்கிறாள். பொறுமை இழந்துதவித்துக் கொண்டிருக்கிறான் பிரகாஷ்.

பிளாட்பாரத்தில் சற்று மங்கலான பகுதியில் நின்று கொண்டாள். தலைக்கு மேலே 'இனி அவள் உறங்கட்டும்' பேனர் விசுவரூபமாக நிற்கிறது. 'இனி பானு உறங்கட்டும்'' என்று மனத்துக்குள் சொல்லிக் கொள்கிறாள்.

இடது பக்கம் திரும்பிப் பார்க்கிறாள்.

அண்ணா சிலை அருகே சிக்னல் அளித்த விடுதலையை விரும்பி ஏற்றுக் கொண்டு சீறி வருகின்றன வாகனப் பேய்களின் வாரிசுகள்.

''பிரகாஷ்...''

ஒருமுறை அழைக்கிறாள். அவன் திடீரென்று அவளை நோக்கித் தன் பார்வையைத் திருப்பிய கணத்தில் கையசைக்கிறாள், அரை இருட்டில் முகத்தைத் திருப்பிக் கொண்டு.

மறுகணம்.

''டியர்...!''

வீதியின் குறுக்கே ஓடி வருகிறான் அவன். அதைக் கவனிக்காது அவசர அவசரமாக அருகிலிருந்த துணிக் கடைக்குள் அவள் நுழைந்துகொண்ட அடுத்த விநாடியில்....

தொடர்ந்து வாகனங்கள் பிரேக்கை அழுத்தும் ஒலிகள் ஏழு ஸ்வரங்களாக ஒலிக்கின்றன.

பஸ் ஸ்டாப்பில் நின்றிருந்த கூட்டம் கறுப்பு டயரில் சிவப்புச் சாயத்தைப் பூசிக் கொண்டிருக்கும் பல்லவனைச் சுற்றிக் கூடுகிறது.

போக்குவரத்து போலீஸ்காரர் சாக்பீஸால் சில கோடுகளைப் பூமியில் இழுத்துக் கொண்டிருக்கிறார்.

நெற்றிக்கண் விழித்து விழித்து மூட ஆம்புலன்ஸ் வருகிறது.

நீரஜா மவுண்ட் ரோட்டின் மனித வெள்ளத்துள் கரைந்தாள்.

# பாட்டிமார்களும் பேத்திமார்களும்

## ஜெயகாந்தன்

### 5. கோதையின் கோபம்

கோதையும் காந்திமதியும் ஒருவருக்கொருவர் கற்கண்டுக் கட்டிகளைப் பரிமாறிக் கொண்டு குதூகலித்தனர். சிங்காரத்துக்குத் தெரியுமா என்று விசாரித்தாள் கோதை. காந்திமதி, தான் சிங்காரத்திடம் போய்ச் சொன்னதையும் அவன் சுவாரஸ்யமில்லாமல் 'இப்போ இது ஒண்ணுதான் குறைச்சல்' என்று அலுத்துக் கொண்டதையும் கோதையிடம் சொன்னாள். கோதை சிங்காரத்துக்கு ஏற்பட்டிருக்கிற கஷ்டங்களையும், அவன் தன்னிடம் வந்து கடன் கேட்டதையும் நினைத்துக் கொண்டாள். இந்த நிலையில் அவன் தனக்குக் குழந்தை பிறப்பதைக் கூட ஒரு சுமையாகவும் சோதனையாகவும் கூட நினைப்பான் என்று அவளுக்குத் தெரிந்தது.



''நாம என்ன செய்ய முடியும்? யார் சொல்கிற புத்திமதியையும் கேட்காமல் எல்லாச் சொத்து மேலேயும் கடன் வாங்கி, அண்ணன்மேலே வழக்குப் போட்டான். இந்த மாதிரி வழக்கெல்லாம் வருடக் கணக்கிலே இழுத்தடிக்கும்னு அவனுக்குத் தெரியாது: வாங்கின கடன் வட்டியும் முதலுமா பெருகி இப்ப கடன் குடுத்தவன் சொத்து மேலே ஜப்தி கொண்டு வரப் போறானாம். உனக்கு அதெல்லாம் தெரியாதா?'' என்று ஆச்சரியத்தால் வாய் பிளந்து நிற்கும் காந்திமதியிடம் கேட்டாள் கோதை.

உண்மையில் காந்திமதிக்கு இவ்வளவு தூரம் நிலைமை மோசமாகி விட்டது தெரியாது. அதற்காகத் தன் சொத்துக்களையெல்லாம் வைத்து வாங்கி இப்போது எல்லாம் மூழ்கிப் போகிற நிலையில் சிங்காரம் ஆகிவிட்டான் என்று அறிகிற போது அவளுக்கு இனிமேல் சிங்காரம் தலையெடுக்கவே மாட்டான் என்று தோன்றியது. இவனோடு சேர்ந்து வைத்தியும் வீணாகி விட்டான் என்பதில் காந்திமதிக்கு அழுகையே வந்தது.

அப்போது வைத்தி ஓர் இரட்டை மாட்டு வண்டியைத் தானே ஓட்டிக் கொண்டு சின்னம்மாவின் வீட்டைக் கடந்து போனான். காந்திமதி எழுந்து வந்து தெருவில் நின்று வண்டி எங்கே போகிறது என்று பார்த்தாள். வண்டி பெரிய வீட்டுக்கு எதிரில் நிற்பதையும், திண்ணையிலும் குறட்டிலும் மரச் சாமான்களும், வெண்கல, பித்தளைப் பாத்திரங்களும் நிறைந்து கிடப்பதையும் கண்டு, ''அடியே சின்னம்மா, சிங்காரம் பெரிய வீட்டைக் காலி பண்ணிக்கிட்டு எங்கேயோ புறப்படறான்டி!'' என்று அலறிக் கொண்டு உள்ளே ஓடினாள்.

தோட்டத்துப் பக்கத்துக் கதவைத் திறந்து கொண்டு, கோதையைத் தேடியவாறு விளக்குச் சாமியும் வந்தார்.

''சாமி... அங்கே போய்ப்பாருங்க — சிங்காரம் பண்ற அநியாயத்தை! பெரிய வீட்டை ஜப்தி பண்றதுக்கு துபாஷி ஏற்பாடு பண்றானாம். அதுக்குப் பயந்து கிட்டு சிங்காரம் பெரிய வீட்டை ஒழிச்சி சாமான்களை எல்லாம் எங்கேயோ எடுத்துக்கிட்டுப் போறான்.... இங்கே வந்து பாருங்க...'' என்று காந்திமதி பரிதாபமாகப் புலம்பிக் கொண்டு அங்குமிங்கும் ஓடிக் கோதையிடமும் சாமியாரிடமும் மாறி மாறி முறையிட்டாள்.

இதற்குள்ளாகத் தெருவில் கூட்டம் கூடி விட்டது. அவ்வையாரம்மாளும் பொன்னம்மாளும் அமுதுவும் விழுந்தடித்துக் கொண்டு ஓடி வந்தனர். கோதையும் காந்திமதியும் விளக்குச்சாமியின் துணையுடன் இந்த வீட்டிலிருந்தே எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டு நின்றனர். யார் போய்ச் சிங்காரத்தைத் தடுக்க முடியும்?

வேலையாட்கள் சாமான்களை வண்டியிலேற்ற ஆரம்பித்தனர். திடீரென்று அமுது விம்மி விம்மி விழ ஆரம்பித்தாள். அவளைச் சமாதானப்படுத்துகிற சாக்கில் அவ்வையாரம்மாள் தைரியமாக முன்வந்து சிங்காரத்துக்குப் புத்தி சொன்னாள்.

''தம்பி! வாழ்ந்து பெருகின வீடு இது. அவசரப்பட்டுக் கலைச்சிடாதே! இப்ப உனக்கு என்ன கஷ்டம் வந்துட்டுதுன்னு இதையெல்லாம் விற்கப்போறே? வேணாம்! சொல்றதைக் கேளு... கோவத்திலே நொறுக்கிடலாம்... ஆனால் திரும்ப ஒண்ணு சேர்க்கிறது ரொம்பக் கஷ்டம்...'' என்று சொல்லிக் கொண்டிருக்கையில் சிங்காரம் பொறுமையிழந்து கத்தினான்.

''இந்தாங்க பெரியவங்களாயிருந்துகிட்டு, புத்தியில்லாம வந்து பேசாதீங்க.. எனக்குக் கோவமோ ஆங்காரமோ ஒண்ணுமில்லே. கடன்காரன் ஜப்திக்கு வரப்போறான் நாளைக்கு. இதெல்லாம் அத்தோட போயிட வேணுமென்னுதான் அப்புறப்படுத்தறேன். வீடு இல்லாம இதெல்லாம் எங்கே கொண்டு போயிவைச்சிக்கச் சொல்றீங்க? அதுக்குத்தான் இந்தப் பழைய காலத்துச் சாமான்களையெல்லாம் வித்துடப் போறேன்... அப்புறம் நல்ல காலம் வந்தால் வாங்கிக்கிறது. இது என்ன பிரமாதம்னு அழுது வந்து அழுவுது!

நீங்க வேற புத்தி சொல்ல வந்துட்டீங்க...!'' என்று நியாயம் பேசினான்.

அவன் பேசி முடிக்கும் வரை 'காத்திருந்த வைத்தி ''ம்...ம்... ஏத்துங்க சாமானை வண்டியிலே, நாழியாகுது'' என்று கூலிக்காரர்களை அவசரப்படுத்தினான்.

''தம்பீ... சிங்காரம்! உன்னைக் கொஞ்சம் வந்துட்டுப் போகச் சொல்லுது சின்னம்மா..'' என்று சொல்லிக் கொண்டு ஓடி வந்தாள் காந்திமதி.

''நான் எங்கேயும் வர முடியாது.. அவங்களை வேணும்னு இங்கே வரச் சொல்லு. இந்தக் காட்சியைப் பார்த்துப் பூரிக்கட்டும்!'' என்று வெடுவெடுப்பாகச் சொன்னான் சிங்காரம். மறுபடியும் 'நீயே வா சின்னம்மா' என்று கோதையை அழைத்துக் கொண்டு வருவதற்காக ஓடினாள் காந்திமதி.

தான் கூப்பிட்டு அனுப்பியும் வராமல் தன்னை வரச் சொல்லுகிற சிங்காரத்தின் மரியாதைக் கெட்ட நடத்தைக்காகக் கோதையின் மனமும் சற்றுக் கோணியது.

''இதோ பாரு காந்திமதி... நான் உதவி செய்யறதுக்காகத்தான் அவனைக் கூப்பிட்டு அனுப்பினேன். இவனுக்கு உதவியும் செய்து அவமானமும் படணுமா? நான் வர முடியாது. உங்களுக்கும் பெரிய வீட்டுச் சாமான்கள் இப்படிக் கொள்ளை போறதைத் தடுக்கணும். அவ்வளவுதானே? இந்தாங்க சாமி! நீங்க போயி அந்தச் சாமான்களை எங்கே எத்தி என்ன விலைக்கு விற்கப் போறான்னு கேளுங்க. அந்தத் தொகையைத் தரேன். வாங்கிக் கொண்டு போயி அவன் மூஞ்சியிலே விட்டெறிஞ்சிட்டு — அந்த வீட்டுச் சாமான்களை அந்தந்த இடத்தில் இருந்தபடியே வைக்கச் சொல்லுங்க.. இவனோட எனக்கொண்ணும் பேச்சு வார்த்தை வேண்டியதில்லை....'' என்று சொல்லிக் விட்டுக் கோபமாய் உள்ளே போய் விட்டாள் கோதை.

''எப்படியோ தெருவெல்லாம் வேடிக்கை பார்க்க, தலைமுறை தலைமுறையாக அநுபவித்து வந்த அந்த வீட்டின் பெருமை 'ஊர்கோலம்' போகாமல் தடுத்தாளே சின்னம்மா'' என்று காந்திமதியின் மனம் கோதையைப் பாராட்டியது.

மறுபடியும் சிங்காரத்திடம் கோதையின் தீர்மானத்தைச் சொல்லி, 'உனக்கு எவ்வளவு பணம் வேண்டும் இந்தச் சாமான்களுக்கு?'' என்று கேட்டு வர ஓடினாள் காந்திமதி.

''பாவம், இந்தப் பெண்ணுக்கு ஏன் இவ்வளவு அஞ்ஞானமான பாசம், இந்தச்சொத்துக்களின் மேல்?'' என்று கூறி அவளுக்குப் பின்னால் புன்னகை செய்தார் விளக்குச்சாமி.

(தொடரும்)








பம்பாய் மாதுங்கா நியூஸ் ஏஜெண்டு திரு பி. எஸ். கதிரேசன் அவர்களின் குமாரத்தி செல்வி ஷண்பகவல்லி என்கிற ராஜ ராஜேஸ்வரிக்கும் செல்வன் ஆர். எஸ். கணபதி B.Com க்கும் சமீபத்தில் பம்பாய் மாதுங்காவில் மிகச் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது. முகூர்த்தத்திற்கும் வரவேற்பிற்கும் ஏராளமான நண்பர்களும் பிரமுகர்களும் வந்திருந்து மணமக்களை வாழ்த்தினர்.

வாழ்க மணமக்கள்



# அன்பே நட்புக்கு அடிப்படை!

கதை: ஜெ. க்ருபா

ஓவியம்: எம். சாமுண்டீஸ்வரி



சீதா ஓர் அழகான பெண். அவளின் குண்டு முகம், அழகான கருவிழிகள் எல்லோரையும் கவரும். ஆனால் அவள் ஓர் அனாதை. அனாதையாக இருந்தாலும் அவள் கல்வி தடைப்படவில்லை. அவள் தான் வகுப்பில் முதல்.

ஒருநாள் அப்பள்ளியின் தலைமை ஆசிரியை விமலா என்னும் ஒருபெண்ணை அறிமுகப்படுத்தினார். விமலாவும் ஓர் அனாதைப் பெண். அவள் அழகி இல்லை. அறிவில் முதிர்ச்சி பெற்றவளும் இல்லை. அவளைக் கண்டால் யாருக்கும் பிடிக்கவில்லை. ஆனால் சீதா அவள் மேல் இரக்கம் கொண்டு அவளைத் தன் தோழியாக்கிக் கொண்டாள்.

இவர்களுடைய நட்பு பலருக்குப் பொறுமையை உண்டாக்கியது. அவர்களுக்குத் தலைமை வகித்தவள் வாணி. அவள் ஒரு சூழ்ச்சி செய்தாள். அவள் விமலாவிடம் சென்று ''விமலா நன்றாகப் படிக்கவில்லை. அவள் என் சிநேகிதி என்று சொல்லிக் கொள்ளவே எனக்கு வெட்கமாக இருக்கிறது'' என்று சீதா சொன்னதாகச் சொன்னாள்.

விமலாவின் மனம் இதை ஏற்க மறுத்தது. இருந்தாலும் வாணி சொல்வதை மறுக்கவும் முடியவில்லை. அதனால் அவள் அதன் பிறகு சீதாவிடம் முன் போல் பழகவில்லை. இதைக் கண்டு வாணி மிகவும் மகிழ்ந்தாள். சீதாவுக்கு ஒன்றும் புரியவில்லை. தன் சிநேகிதிக்கு என்ன ஆயிற்று என்று யோசனை செய்தாள். தனிமையில் அவள் மனமாற்றத்தை எண்ணி அழுதாள்.

முன்போல் ஒன்றாக இல்லாத சீதாவையும் விமலாவையும் கண்ட தலைமை ஆசிரியை இருவரையும் பரீட்சிக்க ஆவல் கொண்டார். ஒருநாள் அவர் விமலாவைத் தனியாக அழைத்து, 'சீதா! நல்லவள் இல்லை' என்று கூறினாள். விமலாவும் தான் அதை அறிந்துதான் அவளுடன் சிநேகம் கொள்ளவில்லை என்று கூறினாள்.

அதன் பிறகு தலைமை ஆசிரியை சீதாவைக் கூப்பிட்டு விமலா நல்லவள் அல்ல என்று கூறினார். ஆனால் சீதா சொன்ன பதில் அவரை அதிர்ச்சிக்கு ஆளாக்கியது. அவள் என்ன கூறினாள் என்று கேட்க உங்களுக்கு ஆவலாக இருக்கிறதா? இதோ அவள் சொன்ன பதில்: ''டீச்சர், நீங்கள் யாரைப் பற்றி வேண்டுமானாலும் சொல்லுங்கள். ஆனால் விமலாவைப் பற்றி மட்டும் ஏதும் கூறாதீர்கள். அவள் ஒரு பால் மனம் கொண்டவள். அவள் மனம் கபடமில்லாதது. அவள் ஒரு குழந்தை. தயவு செய்து என்னை மன்னித்து விடுங்கள்'' என்று கூறி அழுதாள்.

இதைத் தலைமை ஆசிரியை விமலாவிடம் சொல்லி அவள் மனத்தை மாற்றி இருவரையும் பழையபடி நட்புக்கொள்ளச்செய்தார். விமலாவும் தன் தவற்றை எண்ணி வேதனையும் வெட்கமும்கொண்டாள். வாணியிடம் சென்று அவளை ஏசினாள். சீதாவிடம் மன்னிப்புக் கேட்டாள். சீதா பெருந்தன்மையுடன் விமலாவை ஏற்றுக்கொண்டாள். வாணியும் மன்னிப்புக் கேட்டு அவர்களுடன் நட்புக் கொண்டாள். வாணி, சீதா விமலா மூவரும் இப்பொழுது மிகவும் நெருங்கிய தோழிகள்.

கல்கி-ஜாய்டாய் குழந்தைகளுக்கான போட்டி
ஆறுதல் பரிசு பெற்ற கதை, கட்டுரைகள்.



# சாவித்திரியைக் காப்பாற்றுங்கள்!

கதை: எஸ். ஜெயஸ்ரீ
ஓவியம்: எஸ். அனுராதா

"டீ குட்டீ..." என்று எஜமானியம்மாள் போட்ட சத்தத்தில் அந்தப் பங்களாவே கிடுகிடுத்தது. ஸ்டோர்ரூம் சுவரில் சாய்ந்து சற்று ஓய்வு எடுத்துக் கொண்டிருந்த சாவித்திரியின் வயிற்றில் அந்தச் சப்தம் புளியைக் கரைக்கச் சட்டென்று, "இதோ வருகிறேன், அம்மா" என்று கத்திக் கொண்டே ஓடினாள். "என்னடி செய்து கொண்டிருந்தாய் இவ்வளவு நேரம்? சோம்பேறி! போய் வேலையைக் கவனி! உள்ளே எல்லாம் போட்டது போட்டபடி இருக்கிறது! போ, போ. எப்பப்பார்த்தாலும் பராக்குப் பார்ப்பதுதான் வேலை" என்று அவளைத் திட்டிவிட்டுச் சோபாவில் போய் உட்கார்ந்து கொண்டாள்.

உள்ளே சென்ற சாவித்திரிக்கு வேலையைப் பார்த்ததும் தலையைச் சுற்றியது. சாப்பாட்டு மேசையில் சாப்பிட்ட தட்டுக்கள் அப்படியே இருந்தன. சமையலறையில் பாத்திரங்கள் அப்படியே கிடந்தன. இவள் டாமிக்கும் ஜிம்மிக்கும் உணவு கொடுத்து விட்டுத் தானும் சாப்பிட்டு விட்டுப் பாத்திரங்களைத் தேய்த்து, சாப்பாட்டு மேசையைச் சுத்தம் செய்த பிறகு உலர்ந்த துணிகளை அயர்ன் செய்து மடித்து வைத்து, பால் வாங்கி வந்து... அவளுக்கு மயக்கமே வந்தது.

"குட்டீ கிடுகிடுவென்று பாட்டிக்கு வெந்நீர் போட்டு எடுத்து வா. மாத்திரை சாப்பிடணும்!" எஜமானி அம்மாளின் குரலால் இந்த உலகிற்கு வந்த சாவித்திரி வேலையைக் கவனிக்க ஆரம்பித்தாள். அவளுக்கு இன்று காலையிலிருந்தே மனம் சரியில்லை. அவளும் ஒரு காலத்தில் பெற்றோருடன் மகிழ்ச்சியாக வாழ்ந்த ஒரு சிறுமிதான். ஆனால் விதி அவர்கள் வாழ்வில் அதிகமாக விளையாடி விட்டது. ஓ! அது எத்தனை கொடுமை! பழைய நினைவுகள் மனத்தை அழுத்த கண்களில் நீர் பெருக, சாப்பிட வேண்டும் என்பதையும் மறந்து வேலைகளில் ஈடுபடலானாள்.

பளாரென ஓர் அறை கன்னத்தில் விழுந்தது. திடுக்கிட்டுப் பார்த்தாள். சாவித்திரியை அடித்தது உஷா. "ஐயோ! மம்மி, இந்தப் பிசாசைப் பாரேன்! டாடி எனக்கு நியூயார்க்லேந்து வாங்கிண்டு வந்த புளூ கலர் பெல்லைத் தீச்சுட்டா" என்று அலறிய உஷாவைப் பார்த்துத் திடுக்கிட்டுத் தான் அயர்ன் செய்து கொண்டிருந்த பெல்லைப் பார்த்தாள் சாவித்திரி. உண்மைதான்! தன் கடந்த கால நினைவில் பிளக்கைப் பொருத்தி விட்டு அயர்ன் பாக்ஸை பெல்ஸ் மேலேயே வைத்து விட்டது நினைவுக்கு வந்தது.

எஜமானி அம்மாளோடு உஷாவும் சேர்ந்துக் கொண்டு திட்டி அடிக்க, மதியம் வேறு சாப்பிடாததும் சேர்ந்து அவளுக்கு மயக்கம் வந்து சுவரில் சாய்ந்தாள்.

அன்றிரவு வேலையெல்லாம் முடியப் பதினொரு மணியாகிவிட்டது. திரும்பி அதிகாலை நான்கு மணிக்கு எழவேண்டும்.

மறுநாள் காலை எழுந்ததிலிருந்து அவளுக்குச் சரியான வேலை. பால் வாங்கி, பூ பறித்து வைத்து, எல்லோருக்கும் போர்ன்விட்டா, காப்பி, டீ, இத்யாதி — அவரவர்களுக்குப் பிடித்ததைக் கொண்டு கொடுத்து, சமையல்

கார மாமிக்குக் காய்கறி நறுக்கிக் கொடுத்து, துணி மணி தோய்த்து, பாத்திரம் கழுவி, இத்யாதி, இத்யாதி பணிகள் தொடர்ந்தன.

அன்று மாலை அவர்கள் குடும்பம் புல் வெளியில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்த போது எஜமானி அம்மாள், ''இன்று காலை நான் ஒரு கதை படித்தேன். ரொம்பப் பரிதாபமான ஒரு சிறுமியின் கதை. ஒரு சிறுமிக்குப் பாவம் அப்பாவும் அம்மாவும் இல்லை. அவள் வேறொருவர் வீட்டில் வேலைக்குச் சேருகிறாள்'' என்று தொடர்ந்தாள்.

''அவளுக்கு எத்தனை வயதிருக்கும் மம்மி?'' இது உஷா. ''ம்...ஒன்பது, பத்து இருக்கும். பாவம் அந்தப் பணக்கார எஜமானியும், அவள் குடும்பமும் அவளைப் படுத்தும் பாடு என்ன? பாவம் அவள் படும் பாடு. கதாசிரியர் மனத்தைத் தொடும்படி வருணிக்கிறார். ஒரு சமயம் அவள் ஒரு கண்ணாடிக் கோப்பையை உடைத்து விட்டாளென்று அவளை அவள் எஜமானியம்மாள் கைநீட்டிப் பளாரென அறைந்தும் விட்டாள்.

''ச்...ச்... பாவம்! மம்மி'' ரமேஷ்-உஷாவின் தம்பி. ''அப்புறம் அவள் செய்ய வேண்டிய வேலையைச் சொல்கிறேன் கேளுங்கள். தினமும் அவளுக்குப் படுக்கப் போக இரவு மணி பதினொன்று ஆகும். காலை நாலு மணிக்கு எழ வேண்டும்.''

''ஐயோ பாவம்'' — உஷா.

''அவள் தினமும் பால் வாங்கணும், துணி துவைக்கணும், அயர்ன் செய்யணும்...''

எஜமானியம்மாள் சொல்லிக் கொண்டே போகிறாள். அந்தச் சோகக் கதை அவர்களது உள்ளத்தைச் சோகத்தால் நிரப்புகிறது. கண்கள் கண்ணீர் சிந்துகின்றன.

தன் வீட்டில் இதே துன்பங்களைப் படும் பத்து வயதுச் சிறுமியான சாவித்திரியை அவர்கள் மறந்தனர். ஆனால் கதையில் வரும் சிறுமிக்காகக் கண்ணீர் உகுத்து அவர்களது அனுதாபங்களை அவளுக்குத் தெரிவிக்கின்றனர். ''அந்த எஜமானியம்மாளை அப்படியே கிழித்துப் போட்டு விட வேண்டும். இவர்களெல்லாம் ஏன்தான் இப்படி அந்தப்பெண்ணை வாட்டி வதைக்கிறார்களோ?'' என்றான் ரமேஷ்.

''யூ ஆர் கரெக்ட் ரமேஷ். இந்தக் குழந்தைகள் ஆண்டில் குழந்தைகளை வதைப்பதற்காக இப்படிப்பட்டவர்களுக்குக் கடுமையான தண்டனை கொடுக்க வேண்டும்'' என்றாள் உஷா.

அனைத்துலக குழந்தைகள் ஆண்டின் முக்கிய குறிக்கோள், குழந்தைகளுக்குத் தரமான கல்வி, உணவு, உடை வழங்கல் மேலும் அவர்கள் மீது அன்பைப் பொழிந்து அவர்களைத் துன்பம் என்பதே அறியாமல் வளர்ப்பது முதலியன. ஆனால் சாவித்திரிக்கு உணவு, உடை கிடைத்தாலும் அவளுக்கு அன்பு என்பது கிடைப்பதில்லை. தயவுசெய்து யாராவது இந்தச் சாவித்திரியைக் காப்பாற்றுங்களேன்! காப்பாற்றுவீர்களா? உன்னால் காப்பாற்ற முடியாதா என்று நீங்கள் கேட்கலாம்? ஆனால் என்னால் காப்பாற்றமுடியாதே? ஏனென்றால் நான்தானே அந்தச் சாவித்திரி!

---

# மதிய சாப்பாட்டில் இரு உயிர்கள்

**கதை: நா. சிலம்புச் செல்வி**
**ஓவியம்: நா. அருள்மொழி**

என் பேர் செல்வி. நான் ஆறுங் கிளாஸ் 'ஏ' பிரிவில் படிக்கிறேன். என்னோட தோழன்தான் காளி. இவன், ஒண்ணாங் கிளாஸிலிருந்தே, எனக்கு ரோஸ்டு. பள்ளிக்கூடத்திலே இடைவேளை நேரம். ''காளி, டேய் காளி, வெளையாடலாமா?''

''ஓ. வரேன்''ன்னு ஓடி வந்தான்.

''இது என்னோட வீடு. அது ஒன்னோட வீடு. அதுக்கும் பக்கத்தில் ஓட்டல் கடை இருக்குது. செல்வி நான் போய், இட்டிலி, தோசை, லட்டு முறுக்கு, கேசரி எல்லாம் வாங்கிட்டு வரேன்''கிறான். நானும் 'சரி'ன்னு தலையாட்டறேன்.

எனக்கு ரொம்ப நாளாவே ஒரு சந்தேகம். எப்பவும் இந்த விளையாட்டே வெளையாடலாம்றியே வேறே ஒனக்குத் தெரியாதாடாங்கறேன்.

அதுக்கு அவன், ''டீ, செல்வி, எங்க ஆத்தா, அப்பாரு இரண்டு பேருமே எலயமுத்தூர்க் காட்டிலே கல் உடைக்கறாங்க. எங்க ஊட்டல ராய்க் கூழுதான் தெனத்துக்கும். எந்தங்கச்சி சென்னி கூட அதைத்தான் குடிச்சிட்டு வெளையாடும். அதனால்தான் வெளையாட்டிலாச்சும், இட்டிலி, தோசைன்னு ஆசை




ணயத் தீத்துக்கிறேன்''ஞன். எனக்கு எப்படியோ ஆயிடுச்சு. ''ஏண்டா ஞாயித்துக் கெளமை லீவுதானே எங்க வீட்டுக்கு வெளையாட வரையா?''ன்னேன். அவனும் சரின்னுன்.

இவன் மத்தியானச் சோறுகூட, எங்க பள்ளிக்கூடத்திலே இருந்துதான் சாப்பிடுவான். அதுல பாதி சோத்தை, அவனுடைய சயக் கிண்ணத்திலே போட்டு அழுத்தி அழுத்தி ஒரு பேப்பர்போட்டு நல்லா மூடிப் பத்திரமாக வச்சுக்குவான். இது எதுக்குடான்னு நான் கேட்டதுக்கு என் தங்கச்சி மத்தியானமும் கூழுதான் குடிக்கும். நான் சாயந்திரம் போனு ''அண்ணு நீ மட்டும் இஸ்கோலுல, சோறு ரவையெல்லாம் என்னை விட்டுட்டுத் தின்றயே. எனக்கு என்ன கொஞைந்தே'ங்கும். அதுக்குத்தான்' னுன். எனக்கு வருத்தமா ஆயிடுச்சு.

எங்களுக்கு முழுப் பரீட்சை பக்கமாக வருது. எங்க வீட்ல எங்க அக்கா எல்லாம், என்னைக் குட்டிக் குட்டிப் பாடங்களை என்னேட மண்டைல ஏத்தறுங்க. அப்ப, 'காளிக்கு என்ன, படிக்கவே வேண்டாம், ஏன்னு அவந்தான் ஸ்கூல்ல மொதல். இல்லீன்னு ரெண்டாம் ராங்க்' வந்துடுவான்னு நினைக்கிறேன். ஆனல் இந்தப் பையனை ஏன் கொஞ்ச நாளாவே காணலே? எனக்கு மணல் வெளையாட்டுக்கு ஜோடியே இல்லையேன்னு கஷ்டமாக இருக்குது. ஆனு 15 நாள் கழிச்சு டீச்சர் அட்டண்டென்ஸ் எடுக்கறப்போ காளிங்கறப்போ, சன்னமா 'ஆஜர் டீச்சர்'ங்குறன். ஐய்யான்னு குஷியோட திரும்பிப் பார்த்தா 'அய்யய்யோ என்னடா இது'' இடைவேளைல கேக்கறேன். ''ஏண்டா காளி. எதுக்கு நீ மொட்டை அடிச்சிட்டே'ன்னேன். அவன் மெதுவா 'ஏய் செல்வி, எங்காத்தாவும் அப்பாரும் கல்லொடைக்கப் போனப்ப பாறைக்கு வெடி வைச்ச எடத்துல பாறை உருந்து செத்துப்புட்டாங்கன்னு அழாமச் சொல்ருன். எனக்கு அழுகை அழுகையா வருது.

அப்புறம், 'செல்வி, நான் நாளேலிருந்து பள்ளிக்கூடத்துக்கு வர மாட்டேன்'ங்கிறுன். இதைக் கேட்டதும் 'ஓ' வென்று சத்தம் போட்டுப் பெரிசா அழறேன்.

ஐயய்யோ, என்னடா இது. ம்... எம்மேல யாரு தண்ணியை ஊத்தருங்க. முழிச்சுப் பார்த்தா எனக்கு வெக்கமாக போச்சு. இவ்வளவு நேரமும் நான் தூங்கிப் போயிட்டனு? என் தங்கச்சிதான் எம் மேல தண்ணியைக் கொட்டுரு. ஓ இன்னிக்கு ஞாயித்துக் கிழமை இல்ல? என் கண்ணைத் தொடச்சா கண்ணெல்லாம் கண்ணீரு!

---

# ஸுப்ரியாவின் மனத்திரை

**கதை: பி. சாய்லக்ஷ்மி**
**ஓவியம்: ஆர். சாய் பிரகாஷ்**

உங்களுக்கெல்லாம் என்னைத் தெரியுமோ? அச்சச்சோ ... நான் வெறும் முட்டாள். உங்களுக்கு என்னை எப்படித் தெரிய முடியும்? நானே சொல்லட்டுமா? கேளுங்கோ நான்தான் ஸுப்ரியாவாம். நான் ரொம்ப அழகாயிருப்பேன். ஆனல் என் துரதிருஷ்டம் ஒரு அழகான கையை என்னுல அலங்கரிக்க முடியலே.

இப்போ உங்களுக்குப் புரிஞ்சிருக்குமே நான் ஒரு ரிஸ்ட் வாட்சுதான்னு. நான் ஒரு கண்ணுடிப் பெட்டிக்குள்ளே முடங்கிக் கிடந்தேன். அப்போ ஒரு நாள் எனக்கு அதிருஷ்டம் அடித்தது. என்னை என் முதலாளி பெட்டியோட தூக்கி எடுத்து கேஸ் மேல் வச்சார். நான் சடார்னு நிமிர்ந்து பார்த்தேன். அங்கே ஒரு அப்பாவும் பொண்ணும் நின்னுட்டிருந்தா. அந்த அழகான பொண்ணு என்னைப் பார்த்த உடனே அப்பாகிட்ட என்னைத்தான் வாங்கணும்



என்று சொல்லிட்டா. இதைக் கேட்ட உடனே எனக்கு ஒரே சந்தோஷம். அப்பாவும் சரின்னுட்டார். இப்படியாக அந்த அழகான கையை நான் அலங்கரிச்சேன்.

அவாத்துக்கு நான் பெட்டிக்குள்ளே இருந்துண்டே ஸவாரி பண்ணினேன். அந்தப் பொண்ணு (அவ பெயரும் ப்ரியா தான். அவ அப்பா அப்படித்தான் அவளைக் கூப்பிட்டார்) என்னை அவ அம்மாகிட்ட காண்பிச்சா. அவ அம்மாவும் நான் ரொம்ப நல்லாயிருக்கேன் என்ருள். ப்ரியாவுக்குத்தான் என் மேல எவ்வளவு ஆசை? என்னை அவள் தன் பிரண்ட்ஸ்கிட்டே எல்லாம் காண்பிச்சு சந்தோஷப்பட்டா. எனக்கும் ப்ரியா மேல கொள்ளை ஆசை.

ஒருநாள் ப்ரியா என்னைத் தன் அழகான கையில கட்டிண்டு ஸ்கூலுக்குப் போறதுக்கு பஸ்ஸில ஏறிள. ஆனல் ப்ரியா என்னைச் சரியா கட்டிக்கலே, அவசரத்துல. நான் கீழே விழுந்துடுவேனேன்னு பயந்தேன். எனக்குப் ப்ரியாவ கூப்பிட்டுச் சொல்லணும் போல இருந்தது. ஆனா எனக்குத்தான் வாய் இல்லையே? என்னலே என்ன செய்ய முடியும்? வரது வரட்டும்னு பேசாம இருந்தேன். திடீர்னு பஸ் நின்றது. நிறையப் பேர் ஏறிள. ப்ரியா பாவம், நசுங்கிள. அதைவிடக் கஷ்டம் நான் பஸ்ஸுக்குள்ளேயே விழுந்துட்டேன். எனக்கு, ''ஓ. ப்ரியா''ன்னு கத்தணும் போல இருந்தது. ''வாட்டுடு?'' நான் பேசாமக் கிடந்தேன். ப்ரியா ஸ்கூலும் வந்துடுத்து. ப்ரியாவும் இறங்கிட்டா. நான் என்ன செய்யறது? 'லாஸ்டு ஸ்டாப்பிங்' வந்த உடனே எல்லோரும் இறங்கிட்டா. கடைசியா கண்டக்டர் இறங்கப் போனவுடனே என்னைப் பார்த்துட்டார். என்னை எடுத்துண்டு போய் ஆபீஸிலே கொடுத்து விவரமெல்லாம் சொன்ஞர். எனக்கு அழுகை அழுகையா வந்தது. என்னை டிராயருக்குள்ள வேற போட்டுட்டா நான் அங்கேயே கிடந்தேன். ஆனு என் அதிருஷ்டம் அன்னிக்கு ஸாயங்காலமே ப்ரியாவும் அவ அப்பாவும் ஆபீசுக்கு வந்துட்டா. ப்ரியா குரலைக் கேட்டவுடனேயே எனக்குச் சந்தோஷம். இப்படியாக நான் திரும்ப ப்ரியா கிட்டயே போய்ச் சேர்ந்துட்டேன். ப்ரியா என்னை ஆசையாத் தடவிள. நான் பூரிச்சுப் போயிட்டேன். என்னுடைய முகத்துக் கண்ணுடி உடைஞ்சிருந்தது. ப்ரியாவோட அப்பா அதைச் சரி பண்ணிட்டார். நான் இப்போ சௌக்கியமா என் அன்பு ப்ரியாகூட இருக்கேன். உங்களுக்கெல்லாம்சந்தோஷம்தானே? உங்கள் எல்லோருக்கும் ''குட் பை.''

---

# தீப்பெட்டியின் கதை

**கட்டுரை: ஏ. ராஜவேல்**

**ஓவியம்: ஏ. துரைசெல்வி**

நீங்கள் பார்க்கும் ஒரு தீப்பெட்டியைப் பற்றிச் சாதாரணமாகத்தான் நினைப்பீர்கள். ஆனல் அதைச் செய்வதற்கு எவ்வளவு பேர் இங்கு கஷ்டப்படுகிருர்கள். எங்கள் ஊரில் இது எல்லோருடைய வீட்டிலும் குடிசைத் தொழிலாக நடத்தப்படுகிறது. இங்கு எத்தனையோ தீப்பெட்டி ஆப்பீசுகள் உள்ளன. ஒவ்வொரு ஆபீசுக்குப் பக்கத்திலும் உள்ளவர்கள் அந்தந்த ஆபீசுக்குச் சென்று 'கெட்டு' வாங்கி வரு




வார்கள். கெட்டு என்பது தீப்பெட்டி செய்வதற்கான சில். ஒவ்வொரு கெட்டிலும் 144 சில் இருக்கும். அதுபோல் சில் மேல் வைத்து ஒட்டுவதற்குத்தாளும் (ஊதா நிறத்தில்) கொடுப்பார்கள். இதை ஒட்டினால் மேல் பெட்டி மட்டும் கிடைக்கும். அடிப்பெட்டி ஒட்டத் தெரிந்தவர்கள் அதை வாங்கி ஒட்டுவார்கள். இந்தச் சில் நீளமாக இருக்கும். இதை மடித்து ஒட்டினால் அடிப் பெட்டி கிடைக்கும். தீப்பெட்டி ஆபீசில் நிறைய பேர் கட்டை அடுக்குவார்கள். அதாவது மரச் சக்கையில் பள்ளம் பள்ளமாக இருக்கும். இதில் குச்சிகளை வைத்து அடுக்கிக் கம்பியில் கோப்பார்கள். இந்தக் கட்டையில் உள்ள குச்சியின் ஒரு முனையில் மட்டும் படுமாறு மருந்தில் முக்குவார்கள். பின் அதைக் காய வைத்து வேறு ஓர் இடத்திற்கு எடுத்துச் செல்லப்படும். அங்கு அதை ஒவ்வொரு சக்கையில் இருந்தும் உருவி(56) குச்சிகளை வெளியில் எடுத்து அடிப் பெட்டியில் வைத்து மேல் பெட்டிக்குள் நுழைத்து மூடி விடுவார்கள். பின் அவைகள் வேறு ஓர் இடத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டு அதன் மேல் அந்தந்த ஆபீஸ் பெயர் பொறித்த லேபிள்களை ஒட்டுவார்கள். பின் அவை டஜன் கணக்கில் பார்சல் செய்யப்பட்டு வெளி ஊர்களுக்கு அனுப்பப்படுகின்றன. ஒரு குரோஸ், அதாவது 144 மேல் பெட்டி ஒட்டினால் 10 பைசா. 144 அடிப் பெட்டிகள் ஒட்டினால் 15 பைசா. ஒரு கட்டை அடுக்கினால் 3 பைசா. இங்கு எல்லோர் வீட்டிலும் ஏதாவது ஒரு வேலை நடந்து கொண்டிருக்கும். இந்த வேலையை மட்டும் செய்தே எங்கள் ஊரில் எத்தனையோ குடும்பங்கள் பிழைத்துக் கொண்டிருக்கின்றன. என்றும் நிரந்தரமான வேலை என்பதால் பக்கத்து கிராமங்களில் இருந்து எல்லாம் என்னைப் போன்ற குழந்தைகளிலிருந்து பெரியவர்கள் வரை ஆபீசுக்கு வந்து வேலை செய்து தினம் 5 ரூபாய்க்குக் குறையாமல் சம்பாதிக்கின்றார்கள். எங்கள் வீட்டிலும் மேல்பெட்டி ஒட்டுவார்கள். நானும் பள்ளியிலிருந்து வந்தவுடன் அம்மா கூட உட்கார்ந்து ஒட்டுவேன்.

---




○ சாராயத்தில் கார் ஓட்டலாம் — செய்தி!

கண்ணன் : கார் ஏன் இப்படித் தள்ளாடி, தள்ளாடி ஓடுகிறது?

முரளி : சும்மாவா பின்னே, இது ஓடறது சாராயத்தில் அல்லவா?

★ ★ ★

மகன் : அப்பா நம்ம காருக்குச் சாராயம் வாங்கணும் !

நகப்பணுர் : நம்ப தகுதிக்கு ஏண்டா சாராயம்? உயர்ந்த விஸ்கி, பிராந்தி வாங்கிப் போடுடா. மட்ட சரக்கு வேண்டாம்!

★ ★ ★

கண்ணன் (போலீசிடம்): சார் நான் குடிக்கலே. நம்புங்க. சாராயத்தில் ஓடற காரை ஓட்டும் டிரைவர்தான் நான்.

★ ★ ★

ஒர்க்ஷாப்பில் போர்டு : உங்கள் காருக்கு அளவோடு சாராயம் போட்டு அளவோடு ஓட்டுங்கள்!





# Parryware is among the finest sanitaryware in the world. The best architects will agree with us.

AVAILABLE IN
GLEAMING WHITE AND
IN SIX GENTLE
PASTEL SHADES.

E.I.D.- Parry (India) Limited
Ceramics Division
Dare House
MADRAS 600 001



# வட்டமேஜை

● 'கல்கி' உல்லாசப் பயணிகள் சிறப்பிதழைக் கண்டதும் அயர்ந்து போனேன். அப்பப்பா, எத்தனை விஷயங்கள், பேட்டிக் கட்டுரைகள்! சிரத்தையுடன் அற்புதமாகத் தயாரிக்கப்பட்டிருந்தது. என் மனப்பூர்வமான பாராட்டுதல்கள்.

ராயப்பன்பட்டி

ச. லட்சுமணன்

● ''கல்கி உல்லாசப்பயணிகள் சிறப்பிதழ்'' படு ஜோராக இருந்தது. நீர் ஒசியில் ஒரே ஒரு ஊருக்குத்தான் போக முடிந்தது. ஆனால் நாங்களோ 75 பைசா செலவில் இந்தியாவிலும், வெளி நாட்டிலும் பல பல ஊர்களுக்குச் சென்று வந்து விட்டோம். ஆசிரியரான உம்மைவிட வாசகர்களான நாங்களே பாக்யசாலிகள். அற்புதமான சிறப்பிதழுக்கு அட்டைப்படம் ஒரு திருஷ்டிப் பரிகாரம்!

சென்னை—4

வெ. முத்துகிருஷ்ணன்

● டஜன் எஜ் பயணங்கள்: சாத்தனூர் சென்ற குழந்தைகள்; தேனிலவில் தேன் துளிகள்; நினைத்தாலே இனிக்கிறது — நெஞ்ச மெல்லாம் மணக்கிறது போன்ற பயண அனுபவங்களை வெளியிட்டதன் மூலமாக ''உல்லாசப் பயணிகள் சிறப்பிதழ்'' கல்கி — எங்கள் வீட்டிலுள்ள அனைத்துத் தரப்பினரையும் கவர்ந்திருப்பதில் வியப்பேதும் இல்லையல்லவா.

போடிநாயக்கனூர்

—என். சையது முகமது

● ஐயா ஆசிரியரே! 'ஆக்ரா' போனதோ ஓசியில்! உருப்படியாகக் கருத்தரங்கில் கலந்து கொண்டு எதையாவது செய்யுங்கள் என்றால் — கனவுலகில் சஞ்சரித்துவிட்டு — எழுதுவதையும் எழுதிவிட்டு, இது கற்பனை; உண்மையல்ல; வாசகர்கள் நம்ப வேண்டாம் என்றால் நாங்கள் என்ன காதில் ''பூ''வா வைத்திருக்கிறோம்!

பெங்களூர்

மூர்த்தி

● உல்லாசப் பயணிக்காக, சில ஊர்களில் பிரசித்தமான ஆகாராதிகளை வாசகர் நன்கு தொகுத்திருந்தார். ஆனால் கல்கத்தா - ரசகுல்லா; திருப்பதி - லட்டு; திருநெல்வேலி - அல்வா; ஸ்ரீவில்லிப்புத்தூர் - பால்கோவா இவைகளைக் குறிப்பிட மறந்து விட்டது ஏனோ?

போடிநாயக்கனூர்

ரவிராஜ்

● விமர்சகர் 'ஆடுபாம்பே' படத்திற்கு நன்றாக மருடி வாசித்தாலும், நாத்திகவாதம் செய்வோரிடமும் பேராசைக்காரர்கள், பணப் பேய்கள், வேடதாரிகள் உண்டு என்கிற போதும் வில்லன் கடைசியில் இறப்பது குறித்துக் கேட்கும் கேள்வியிலும் சீர்காழியின் பாடலில் இறையுணர்வு வெற்றி பெறுகிறது என்று சொல்லுகிற போதும் 'பாம்பின்' பல்லைப் பிடுங்கி சபாஷ் பெற்று விட்டார்.

விருத்தாசலம்

—தங்க பானு

● 'எங்க ஊர்ல பெரிய டூரிஸ்ட் அட்ராக்ஷன் இந்தப் பிச்சைக்காரங்கதான்' என்ற துணுக்கு ('தர்மசங்கடம் தம்பு') ஜோக்காக இருந்தாலும் உண்மை நிலை இதுதானே?

''ஓரிடத்தில் அணி அணியாகக் குடிசைகள்; மற்றோர் இடத்தில் அடுக்கடுக்கான மாளிகைகள். ஏனிந்த ஏற்றத் தாழ்வு'' என்று பிரெஞ்சு தேச மெக்குவல் பிரிக்கெட் நம்மைப் பார்த்துக் கேட்பது நியாயம்தான்! உறங்கும் மனக்காட்சிகள் விழித்துக் கொள்ளட்டும்.

திருச்சி—8

எஸ். பி. முருகப்பன்

● தம்பு ரொம்பப் பொல்லாதது. எங்கள் மேற்கு மாம்பலத்தை இப்படி படம் புடிச்சாப்பலே பளிச்சுனு சொல்லிக் காட்டிடிச்சே!

சென்னை—33

கே. ரேவதி

● முதல் பக்கத்தில் மகிழ்ச்சிச் சிரிப்போடு படிக்கத் துவங்கினால் புத்தகத்தை மூடும் போதும் சிரிப்புத்தான்!

வேலூர்

எஸ். ஹாரீஸன்

● இயற்கைக் காட்சியை ரசிக்க ஏர்க்காடு வந்த குமாரி மாலா ஜெயராமிற்கு அழகான இளம் பெண்களை, இளைஞர்கள் ரசிப்பதும் இயற்கைதான் என்பது விளங்காமல் போனது ஏனோ?

சேலம்

இளைஞன் என். எஸ். ரவீந்திரநாத்

● நிருபர் கேட்டிருந்த பல கேள்விகளுக்கு விளக்கமாகப் பதில் கொடுத்திருந்தும், மெரினா கடற்கரை சீரமைப்புபற்றி அமைச்சர் வீரப்பன் அளித்துள்ள பதில் திருப்தி அளிப்பதாய் இல்லை. அழகுபடுத்துவது மட்டுமல்ல, அவற்றைப் பராமரிப்பதும் ஒரு சாதனையாகும். இதனை அரசு உணரட்டும்.

சென்னை—33

—எஸ். ஆர். சத்யநாராயண்

● குற்றாலத்தைப் பற்றித் தனியாக ஒன்றும் எழுதவில்லை. எப்படி விட்டுப் போயிற்று என்பதுதான் தெரியவில்லை. கல்கி என்றவுடன் ரசிகமணி நினைவுக்கு வரவில்லையா? டி. கே. சி. என்றவுடன் குற்றாலம் நினைவுக்கு வரவில்லையா?

தென்காசி

—கே. பி. சிவராமன்

# குற்றாலத்தை மறக்கலாமா?

# குங்குமப் பொட்டுகள் யாவும் ஒரே வகை அல்ல !

சிங்கார் நிச்சயமாக மேன்மையானது
• சன்னமாகவும், சமனமாகவும் அணிந்திடக் கூடியது • எழில் மிகுந்தது • வழிந்து பரவாது
• உலர்ந்ததும் கீறல் விழாது • கறை ஏற்படுத்தாது
• சுகாதார முறையில் தயாரித்தது.

குறிப்பிட்டுக்
கேட்பீர் எப்போதும்

**சிங்கார்**

முழுமை எழில் கொஞ்சும்.
இந்தியாவின்
உச்ச விற்பனையுள்ள
குங்குமப் பொட்டு.

பாரமௌண்ட் ப்ராடக்ட்ஸ்,
809, ப்ரஸாத் சேம்பர்ஸ்,
பம்பாய் 400 004.




ஸிந்தூர்



everest/638/SH Tam



## 5

சாயங்காலத்து மஞ்சள் வெயிலில் குல்மோஹர் பூக்கள் ரத்தச் சிவப்பாகத் தெரிந்தன. மைதிலி ஒரு வினாடி அவற்றைப் பார்த்துவிட்டு ராஜுவைப் பார்த்தாள். ராஜுவின் அதரங்களில் ஒரு லேசான மென்மையான புன்னகை தெரிந்தது. ஐயோ பாவம் என்கிற மாதிரி....ஓ 'இவருடைய பச்சாதாபம் நமக்கு வேண்டவே வேண்டாம்' என்று அவள் சட்டென்று தன்னைச் சமாளித்துக் கொண்டாள்.

''இப்படி இருந்திருக்கலாமே அப்படி இருந்திருக்கலாமேன்னு நான் யோசனை பண்ணறதில்லை. ராஜு, அதனாலே ஏதும் லாபமில்லேன்னு நான் நினைக்கிறேன்.''

''லாபமில்லேதான். இருந்தாலும் மனுஷ மனசு சும்மா இருக்கா? இதிலே ஏற்படற அடிகளையும் புண்களையும் லேசிலே மறந்துடுமா?''

அவள் சிரிக்க முயன்றாள். இவர் எதற்காக இன்றைக்கு வேலை மெனக்கெட்டு இங்கு வந்து உட்கார்ந்திருக்கிறார் என்று நினைத்துக் கொண்டாள்.

''அடிகளையும் புண்களையும் மறக்காம இருந்தாதான் கஷ்டம் ராஜு! எனக்கு அதைப் பத்தின ஞாபகமே இல்லே.''



ராஜு நம்ப முடியாதவர் மாதிரி அவளைப் பார்த்தார்.

''அப்போ நீ ஓர் அசாதாரண மான பெண்மணி தான்'' என்றார் ஆங்கிலத்தில். ''சரி அதை விடு'' என்றார் தோற்றுப் போனவர் மாதிரி. ''அன்னிக்கு நளினியைப் பத்திச் சொன்னேனே விசாரிச்சியோ? இன்னும் அந்தப் பையனோட அவ போயிண்டிருக்கா போலிருக்கே?''

அவளுக்கு லேசாக முகம் சிவந்தது. இவருக்கு இதைத்தவிர வேறு வேலை இல்லையோ என்று தோன்றிற்று.

''விசாரிச்சேன். அந்தப் பையனுக்கே அவளைக் கல்யாணம் பண்ணிக் கொடுக்கிறதுன்னு தீர் மானிச்சுட்டேன்!''

''குட்! வெரி குட்!'' அவருடைய பார்வை எங்கோ அவளைத் தாண்டி ஆகாசத்தில் மிதந்தது. அவளுக்குக் கௌசல்யாவின் ஞாபகம் வந்தது. அவளுடைய சின்னத் தலைமும் கணவனின் சிரிக்கும் விழிகள் எங்கே அலைகின்றன என்கிற சந்தேகமும் குரோதமும் நினைவுக்கு வந்தன. ராஜுவின் மிதக்கும் பார்வைக்கு அந்த நினைவுதான் காரணம் என்று தோன்றிற்று. ராஜு சட்டென்று சாய்வு நாற்காலியின் பிடியில் படர்ந்திருந்த அவளுடைய மெத்தென்ற கையின் மேல் தன் கையை வைத்தார்.

''நான் போயிட்டு வரேன் மைதிலி. யூ ஆர் எ ப்ரேவ் வுமன்'' என்றார். கையை எடுக்க மனமில்லாதவர் போல் எடுத்தார். பிறகு அவளை ஒரு நீண்ட விநாடி பார்த்து விட்டுக்கேட்டை நோக்கி நடந்தார். அவளுக்கு முகம் சிவந்து போயிற்று. அவர் கைவைத்த இடம் இன்னும் கதகதப்பாக இருந்தது. அவளுக்குக் கண்களில் லேசாக நீர் திரையிட்டது. இதுவும் ஒரு அடி... மறந்து போக வேண்டிய அடி...

கேட்டுக் கம்பியை மாட்டி விட்டுப் போகும் அந்தக் கையைப் பார்க்கையில் ஒரு சீற்றம் எழுந்தது. அவருடைய செய்கை இயல்பானது இல்லை என்கிற சீற்றம். அவருடைய மனத்தின் விகாரத்தைப் பிரதிபலித்தது அது என்ற சீற்றம். அவளுக்குச் சிரிக்க வேண்டும் போல் இருந்தது. இந்த க்ஷண நேர ஸ்பரிசத்தால் அவருடைய எந்த வேட்கை தணிந்தது?

# யுகங்கள் மாறும் போது...

## வாஸந்தி

ராஜு வியப்புடன் அவளைப் பார்த்தார்.

''மைகாட்! இவ்வளவு சீக்கிரமா?''

''இந்த மாதிரி சமாசாரங்களை ரொம்ப ஒத்திப் போடறது நல்லதில்லேன்னு தோணித்து.''

''நன்னா விசாரிச்சியா?''

''விசாரிச்சிருக்கேன். நல்ல குடும்பமாத்தான் தெரியறது. அதுக்கு மேலே அவ அதிர்ஷ்டம்...''

அவள் சில விநாடிகள் பொறுத்துச் சொன்னாள்:

''கல்யாணங்கறது ஒரு லாட்டரி மாதிரி. நல்ல சீட்டு விழறதெல்லாம் அவாவா அதிர்ஷ்டத்தைப் பொறுத்தது!''

அவளுக்குச் சட்டென்று பழசெல்லாம் ஞாபகம் வந்தது. அவள் கல்யாணமாகி இந்த வீட்டுக்கு வந்த போது ராஜுவும் இதே காலனியில் புதிய வீடு கட்டிக் கொண்டு வந்திருந்தார். ரோட்டரி கிளப் அங்கத்தினர்கள் என்ற சிநேகிதத்தில் வீட்டுக்கு வருவார். அவளுடைய கணவனைச் சந்திக்க அவர் வரும் போதெல்லாம் அவருடைய கண்கள் அலைவதை அவள் உணர்ந்திருக்கிறாள். ராஜு அப்பொழுதெல்லாம் பார்க்க நன்றாக இருப்பார். அதை உணர்ந்து கொண்டும் இருந்தார். அவர் வந்து விட்டுப் போன அன்றெல்லாம் பரமேச்வரன் அவளை அதிகமாகத் திட்டுவார். ஒரு முறை ரோட்டரி தம்பதிகள்

எல்லாம் சாத்தனூர் அணைக் கட்டுக்குப் பயணம் போயிருந்தார்கள். அவள் கௌஸல்யாவுடன் பேசிக் கொண்டு அணைக்கட்டின் மேல் நடந்து கொண்டிருந்தாள், பின்னால் ராஜு வருவதைக் கவனிக்காமல், சின்னப் படிக்கட்டுக்களில் இறங்கும் போது அவள் நிலை தடுமாறி விழுந்தாள். அவள் தன்னைச் சமாளித்துக் கொள்வதற்குள் ராஜு அவளைப் பிடித்துக் கொண்டிருந்தார். சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு அவருடைய கைகள் அவளுடைய உடம்பை அதிகமாகவே அழுத்துவதை அவள் உணர்ந்தாள். சட்டென்று அவள் உடலெங்கும் மின்சாரம் பாய்வது போன்றிருந்தது. பரமேச்வரனின் அணைப்புக்குள் ஏற்படாத சிலிர்ப்பு இவர் கைப்பட்டவுடன் ஏற்பட்ட மாதிரி இருந்தது. அவள் கலவரப் பட்டுப் போனாள். உடனேயே சமாளித்துக் கொண்டு அவருடைய பிடியிலிருந்து விலகி நின்றாள். அதற்குள் எல்லாருடைய பார்வையும் அவர்கள் மேல் விழுந்து விட்டது. ''மிஸஸ் பரமேச்வரன் ஆர் யூ ஆல் ரைட்'' என்கிற கரிசனக் கேள்வியில் நையாண்டி தெரிந்தது. அவள் வேண்டுமென்றே ராஜுவுக்கு அந்தச் சந்தர்ப்பத்தைக் கொடுத்த மாதிரி கௌசல்யா அதற்குப் பிறகு நடந்து கொண்டது அவளுக்கு அதிர்ச்சியைத் தந்தது. பரமேச்வரனின் கோபம் இன்னும் வலுபெற்றது. ராஜுவுடன் அவளுக்குத் தகாத உறவிருந்த மாதிரியே அன்றிலிருந்து பேச ஆரம்பித்தார். மிகப் பயங்கரத் தாழ்வு மனப்பான்மையுடைய அவரிடம் தான் வாதாடுவதில் ஏதும் லாபமில்லை என்று அவள் மௌனமானாள். தூக்கம் வராத இரவுகளில் அன்றைக்கு ராஜு வின் கைப்பட்டவுடன் உடம்பில் ஏற்பட்ட சிலிர்ப்பு ஞாபகத்துக்கு வரும்; மனசைக் கலவரப் படுத்தும். அந்த மனசுக்குக் கடிவாளம் போடா விட்டால், திசை தடுமாறிச் சிதறிப் போகும் என்று அவள் அவசரமாக அதை இழுத்துப் பிடிப்பாள். ஒவ்வொரு முறையும் அது நிலை தடுமாறி ஓடப்பார்க்கும் போது அதைச் சமாதானப்படுத்தி இழுத்து நிறுத்துவதே ஒரு சாதனையாகப் போயிற்று..?

இத்தனை வருஷங்களுக்குப் பிறகும் இந்த ராஜுவின் கண்களில் சலனம் இருக்கிறது. அந்தச் சலனம் நியாயமற்றது என்று நினைக்காமல் மனைவி ஊரிலில்லாத போது இங்கு வந்து அவர் நிற்பதைப் பார்த்து அவளுக்குப் பரிதாபமாக இருந்தது.

கேட் திறக்கும் ஓசை கேட்டது. நளினி உள்ளே சுபாவமான அவசரத்துடன் நுழைந்தாள். அவளைப் பார்த்ததும் நின்றாள்.

''என்ன மம்மி இன்னுமா இங்கே உட்கார்ந்திருக்கே'' என்றாள்.

''இதோ எழுந்திருக்கிறேன்.''

மைதிலி எழுந்து வரும் வரையில் நளினி காத்திருந்தாள்.

மைதிலி மெல்லச் சொன்னாள்.

''நளினி பரீட்சை நெருங்கிடுத்து. நீ வெளியே போறதைக் குறைச்சுக்கணும்.''

''ஆமாம் மம்மி. பரீட்சை வரை அசோக்கை, வரவேண்டாம்னு சொல்லியிருக்கேன்.''

இந்தப் பெண்ணுக்கு இவ்வளவு விவேகம் வந்து விட்டதா என்று மைதிலிக்கு வியப்பாக இருந்தது. நளினி மாடிக்குத் தன் அறைக்குச் சென்றாள். மேஜைமேல் இருந்த புத்தகங்களைப் பார்த்ததும் ஆயாஸமாக இருந்தது. ஓ! எவ்வளவு படிக்க இன்னும் இருக்கிறது என்று திகைப்பேற்பட்டது.

அவள் அன்றைக்குத் திட்டவட்டமாகச் சேகரிடம் சொன்னாள், பரீட்சை முடிகிற வரை இனிமேல் அவனைத் தான் சந்திக்கப் போவதில்லை என்று.

அவன் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டான்.

''ஓ!என்னாலே உன்னைப் பார்க்காம இருக்க முடியாது'' என்றான். அவள் கிளம்பும் போது அவன் முரட்டுத்தனமாக அவளைப் பிடித்திழுத்து அதரங்களை ஸ்பரிசித்தது நினைவுக்கு வந்தது. இப்பொழுதும் உடம்பெங்கும் ஒரு உஷ்ணம் பரவிக் கன்னம் சிவந்தது. அவன் பிடியிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்வது எத்தனை கஷ்டமாகப் போய் விட்டது என்று அவள் நினைத்துக் கொண்டாள். 'ஓ! ஹி இஸ் எ டேஞ்சரஸ் மேன்' என்று சொல்லிக் கொண்டாள். இனிமேல் கொஞ்ச நாட்களுக்கு அந்த ஆளைப் பற்றி நினைக்காமல் படிப்பில் கவனம் செலுத்த வேண்டும் என்று நினைத்துக் கொண்டாள்.

இரண்டு நாட்களுக்குப் பாடத்தில் மனசு சரியாகப் பதிய மறுத்தது. பிறகு சற்று வணங்க ஆரம்பித்தது. மிக சிரமப்பட்டுப் படித்தால்தான் தேற முடியும் என்கிற பயம் ஏற்பட்டது. அவள் வெகு தீவிரமாகப் படிக்க ஆரம்பித்தாள்.

பரீட்சை ஆரம்பித்து ஒரு ஜுர வேகத்துடன் முடிந்தது. பாஸாகி விடுவோம் என்று அவளுக்கு நம்பிக்கையேற்பட்டது. உடம்பின் ஆயாஸம் அப்பொழுதுதான் தெரிந்தது. அன்றைக்கு மாலையே வந்து விட்டான் அசோக். அவளைக் கட்டாயப் படுத்தி ஒரு



''அதையேன் கேட்கறீங்க? அங்க கதை எழுதி அனுப்பினால், பத்து கதையா திரும்பி வருது...''

''அதெப்படி சாத்தியம்?''

''என் பெயரிலேயே இன்னொரு எழுத்தாளர், இதே ஊரில், இதே விலாசத்தில் இருக்கிறார் போலிருக்கிறது.''

—எம். ஏ. அப்துல் காதர்

சினிமாவுக்கு அழைத்துப் போனான். சினிமா தியேட்டருக்குள் அவன் பற்றி வைத்த போது அவளுக்குச் சலிப்புக் கூட ஏற்பட்டது. கல்யாணமாகிற வரை இப்படி எப்படிச் சமாளிக்கப் போகிறோம் என்றிருந்தது. அவனிடம் ஒரு வெறி தெரிந்தது- உன்னை ஆளுவேன் என்கிற மாதிரி. எனக்கு அதற்கு உரிமை இருக்கிறது என்கிற மாதிரி. அவளுக்கு முதல் முறையாக மனசில் ஒரு நெருடல் ஏற்பட்டது. அவன் அவளிடம் நளினமாக மிருதுவாக நடந்து கொள்வானா? ஒரு ஜென்டில்மேன் மாதிரி அவளுடைய மெல்லிய உணர்வுகளுக்கு மதிப்புக் கொடுப்பானா? அவளுடைய அழகிய உடம்பைப் பார்த்து, சிரிப்பைப் பார்த்து மயங்கி விட்டோமா? அவனிடம் அவளுக்கு மோகம் ஏற்பட்டதே பருவக் கோளாறினாலா? பருவ சர்ப்பினாலா? அவள் இசைவாக நடக்கா விட்டால் அவனுக்கு அதிருப்தி ஏற்பட்டது. லேசாகக் கோபம் கூட வந்தது. எரிச்சல் வார்த்தைகளில் தெரிந்தது. அவளுக்கு இதெல்லாம் புதிய கண்டுப்பிடிப்பாக லேசான அதிர்ச்சியாக இருந்தது. இவனும் ஒரு 'பொஸஸிவ்' டைப்போ? கல்யாணமானதும் அவளுடைய தனித்தன்மையையே அமுக்கி அவளை ஆக்கிரமித்துக் கொள்வானோ என்கிற கேள்விகள் மனத்தில் தோன்ற ஆரம்பித்தன.

அவள் சட்டென்று தன்னைச் சமாளித்துக் கொண்டாள். ''டு ஹெல் வித் இட்!'' என்று சொல்லிக் கொண்டாள். ''முடிவு எடுத்தாகி விட்டது. அதன் விளைவு எப்படியிருந்தாலும் ஐ ஷல் ஃபேஸ் இட். அவனுள் ஏதாவும் வக்கிரங்கள் இருந்தால் அதைச் சரிக் கட்டி விடுவேன். சமாளிப்பேன். அம்மா மாதிரி நான் ஏமாளியுமில்லே. கோழையுமில்லே...''

மாலா வந்து விட்டாள் துபாய் லிருந்து குழந்தையுடன். குழந்தையின் மோஹனச் சிரிப்பையும் ரோஜா மேனியையும் பார்க்கையில் மனசில் இதுவரை உணர்ந்திராத ஒரு பரவசம் ஏற்பட்டது. ஒரு புதிய உலகமும் அதன் பரிமாணங்களும் தெரிந்த மாதிரி.

மாலா தான் மிகவும் மாறிப் போன மாதிரி அவளுக்கு இருந்தது. அவளது தனித்தன்மையே போய் விட்ட மாதிரி அவள் மூச்சும் பேச்சும் நினைவும் அவள் கணவனைப் பற்றி — குழந்தையைப் பற்றி. எத்தனை குறுகிய உலகமாகிப் போய் விட்டது அவளுடைய உலகம்? அம்மாவைப் பற்றி தங்கையைப் பற்றிக் கூட அவளுக்கு ஏதும் ஆழ்ந்த சிந்தனை இருந்த மாதிரி தெரியவில்லை. அவள் கணவனுடன் ஒரு பரிபூரண சங்கமம் அனுபவித்த மாதிரி தோன்றிற்று. தன்னுடைய வாழ்வில் அத்தகைய சங்கமம் இருக்குமா என்று நளினி யோசித்தாள். அந்த மாதிரி சங்கமம் ஏற்பட்டாலும் தன்னால் தன் தனித் தன்மையை இழந்து நிற்க முடியாது என்று நினைத்துக் கொண்டாள். அவளும் அசோக்கும் தங்கள் தனித்தன்மையைக் காப்பாற்றிக் கொள்ள முயன்றால் சங்கமத்துக்கு வழியிருக்குமா?

நாட்கள் வெகு வேகமாக நழுவிக் கொண்டிருந்தன. நகைக்கடையிலும் துணிக்கடையிலும், டெய்லர் கடையிலுமாகக் குழந்தையை கஸ்தூரி யிடம் விட்டுவிட்டு மூவரும் அலைந்து கொண்டிருந்தார்கள்.

கல்யாணத்துக்கு முதல் நாள் அசோக்கின் சித்தப்பாவும் சித்தியும் குழந்தைகளுடன் வந்தார்கள். மிகஎளிமையாக இருந்தார்கள். 'எதையும் எதிர் பார்க்காமல் எதற்கும் ஆசைப் படாமல் இவர்கள் நிழலில் வளர்ந்த அசோக் எப்படி இத்தனை துடிப் புள்ளவனாக இருக்கிறான்?' என்று நளினிக்கு ஆச்சரியமாக இருந்தது. அவர்கள் கூட்டத்தில் அவன் தனியாக நின்ற மாதிரி இருந்தது.

திருமணம் எளிமையாக நடந்து முடிந்தது. தன்னுடைய வாழ்வு ஒருத்தனுடன் பிணைக்கப் பட்டு விட்டது என்கிற உணர்வு அவளுள் ஒரு திகைப்பை ஏற்படுத்திற்று. மாலாவிடம் தனியாக ''எனக்குப் பயமாயிருக்கு மாலா'' என்று சொன்ன போது அவள் சிநேக பாவத் தோடு சிரித்தாள்.

''என்ன பயம்? முதலிலேயே தெரிஞ்சு பழகின ஆள் தானே? என் கல்யாணத்தின் போது உன் அத்திம்பேரைப் பத்தி எனக்கு எதுவுமே தெரியாது. எனக்கு எப்படியிருந் திருக்கும் பார். அப்புறம் எல்லாம் சரியாயி டுத்து. இந்த பயத்துக் கெல்லாம் அர்த்தமே யில்லேன்னு தோண ஆரம்பிச்சுடுத்து.''

வாஸ்தவத்தில் மாலா மாதிரி எப்படி முக்கால் வாசிப் பெண்கள் கண்ணை மூடிக் கொண்டு முன்பின் தெரியாத ஆணிடம் கழுத்தை நீட்டுகிறார்கள் என்று நளினி வியந்து போனாள்.

திருமணமான அன்று இரவே அவளும் அசோக்கும் ஊட்டிக்குக் கிளம்பினார்கள். ரயிலில் முதல் வகுப்புக் கூபேயில் அவள் ஜன்னல் ஓரமாக உட்கார்ந்தாள். மார்பு படபடவென்று அடித்துக் கொண்டது. நரம் பெல்லாம் தளர்ந்து போன மாதிரி இருந்தது.

இரண்டு வலுவான கரங்கள் அவளுடைய தோள்மேல் அமர்ந்தன. அவளை தூக்கி நிறுத்தி வெகு தாபத்துடன் அவன் அவளைப் பார்த்தான். ''இனிமே என்னை ஏமாத்த மாட்டே. இல்லையா?'' என்று மெல்லக் கேட்டான்.

அவனுடைய ஸ்பரிசமும் பார்வையும் குரலும் அவளுக்குப் போதையை ஊட்டின. மனத்தை வட்டமிட்டுக் கொண்டிருந்த எல்லாச் சந்தேகங்களையும் பயங்களையும் மறந்து அவனுடைய அணைப்புக்குள் அவள் புகுந்து கொண்டாள். (தொடரும்)

''ஒரு கோழி, ஒரு ஆடு, ஒரு மனிதன்!''
''என்ன, புதுப்படமா?''
''இல்லே, என் மனைவி கார் ஓட்டும் பொழுது எதிரில் அகப்பட்டவை!''

— எஸ். சந்திரசேகர



# தாய் ஒருத்தியும், தந்தை ஒருவனும்!



காடவன்

தில்லையாடி ஸ்டேஷனில் அப்போது ரயிலிலிருந்து இறங்கியவர்கள் மொத்தமே நாலு பேர்கள்தாம். இனியம்மாளும், அவள் கணவனும் பிளாட்பாரத்தை விட்டு வெளியே வந்தார்கள். ஸ்டேஷனுக்கு வெளியே நோட்டம் விட்டாள் இனியம்மாள். அவளுக்குப் பக்கத்தில் தரையில் அவளுடைய டிரங்க் பெட்டி இருந்தது. அதை ரயிலிலிருந்து கீழிறக்கி, பின்னர் பிளாட்பாரத்திலிருந்து சுமக்க முடியாமல் சுமந்து வந்து அங்கே இறக்கி வைத்திருந்தான் அவள் கணவன்!

எதிர்த்தாற்போலிருந்த சில கடைகளையும் ஸ்டேஷனையொட்டியிருந்த ஒரு டீக்கடைக்கு முன்னாலும் பார்த்த இனியம்மாள், பின்னர் அப்படியே திரும்பித் தன் கணவனைப் பார்த்து ஒரு வித்தியாசமான சிரிப்போடு, ''தெரிஞ்ச பையன்களோ, ஆட்களோ இருந்தால் யாரையாவது கூப்பிட்டு இந்தப் பெட்டியைத் தூக்கி வரச் சொல்லலாம்னு பார்த்தேன்; யாரையும் காணோமே!'' என்றாள். பிறகு இனியம்மாள் மீண்டும் தன் கணவனைப் பார்த்துச் சொன்னாள்: ''பெட்டியைத் தூக்குங்க. இதோ கிட்டத்திலேதானே இருக்கு வீடு; ரெண்டு நிமிஷத்திலே போய்ச் சேர்ந்து விடலாம்!''

கைகள் இரண்டையும் ஒய்யாரமாய் வீசியபடி மனத்தில், 'குபுக் குபுக்' கென ஒரு குதூகலம் கொப்புளித்துக் கிளம்ப வெகு மிடுக்காக முன்னே நடந்து கொண்டிருந்தாள் இனியம்மாள். அந்தப் பெட்டியைத் தூக்கி ஒரு பக்கத் தோளில் வைத்துச் சுமந்தபடி அவளுக்குப் பின்னால் நடந்து கொண்டிருந்தான் அவள் கணவன்!

அந்தப் பாதையின் ஓர் ஓரத்தில் புரை போலிருந்த ஒரு சிறிய கோயிலின் வெளித்தளத்தில் அந்தப் பெட்டியை இறக்கி வைத்தான் கணேசன். சத்தம் கேட்டு நின்று திரும்பிப் பார்த்த இனியம்மாளுக்குக் கோபம் வரும் போலிருந்தது. ''அதுக்குள்ளே தோள் வலி எடுத்துப் போச்சா? கிட்டத்தில்தானே இருக்கு வீடு; போயிடலாமில்லே?''

''ம்ம்...!'' அவன் தன் நெஞ்சைத் தடவி விட்டுக் கொண்டு இனியம்மாளைப் பார்த்து விட்டு, அப்படியே அந்தக் கோயிலின் உள்ளேயும் பார்த்தான். அவன் அந்தக் கோயிலினுள்ளே பார்த்த விதமானது, மனச்சுமையையும் இறக்கி வைக்க ஓர் இடம் தேடுவதைப் போலவேயிருந்தது.

அவனுடைய மனச்சுமைதான் என்ன? செல்லம்மாளின் மகன் கணேசனும், மருமகள் இனியம்மாளும் சினிமாவுக்குப் போயிருக்கிற நேரத்தில் பக்கத்து வீட்டு அலமேலு வந்து செல்லம்மாளிடம், ''உன் மருமகள், 'ராத்திரியிலே நாங்க மனம் விட்டுப் பேசிச் சிரிக்க முடியல்லே; கதவுக்கு வெளியே வாசலிலே படுத்திருக்கிற என் அத்தை எங்க பேச்சு வார்த்தைகளை ஒட்டுக் கேக்கறாங்களோன்னு எனக்குச் சந்தேகமாயிருக்கு'ன்னு சொன்னாள்! நீ ஒட்டுக் கேட்கிற வேலைகூடச் செய்யறியா?'' என்றாள்.

கொஞ்ச நேரம் வரை அப்படியே விக்கித்துப் போன செல்லம்மாள், பின்னர் சொன்னாள்: ''அவள் மேலே குத்தம் சொல்லக் கூடாது. அவளும் சின்னஞ்சிறுசுதானே!... அது சரி, அவள்தான் நல்லது கெட்டது புரியாமல் உன்கிட்டே வந்து சொன்னாள்; நீ ஏன் அதை என்கிட்டே வந்து சொல்றே?''

அலமேலு உதட்டைப் பிதுக்கித் தோள் பட்டைகளையும் உயர்த்திக் குலுக்கிப் பிலுக்குக் காட்டி விட்டுப் போய் விட்டாள்!

பத்து நாட்களுக்குப் பிறகு ஒரு நாள் காலை நேரம். இனியம்மாள் அன்று புலியம்மாளாக மாறிச் செல்லம்மாள் மீது குறி பார்த்துப் பாய்ந்தாள். இந்தப் பத்து நாட்களாகவே அவளுக்கு மனத்தில் ஒரு பரபரப்பும், பற்களில் ஒரு நறநறப்பும் இருந்து வந்தன. தானும் தன் கணவனும் சிரித்துப் பேசி மகிழ்வதைக் கூடத் தன் மாமியார் விரும்பவில்லை என அவள் எல்லோரிடமும் சொல்லிக் கொண்டிருந்தாள்; செல்லம்மாளிடமும் அவ்வப்போது நேருக்கு நேராக வம்பு வளர்த்தாள். தன் மேல் இல்லாத பொல்லாத குற்றங்களையெல்லாம் மனம் கூசாமல் சுமத்துகிற மருமகளைக் கண்டு செல்லம்மாள் ஒதுங்கியொதுங்கியே போய்க் கொண்டிருந்தாள். அன்று காலையில் எழுந்தது முதலே செல்லம்மாளின் மன நிலையைக் கெடுத்துப் பாடாய்ப் படுத்தி வந்த இனியம்மாள், பிற்பகல் ஆனவுடன் தன் கணவனை அதட்டி விளித்து, ''என் அப்பன் வூடு சத்திரம்

---

ஹரியானாவின் புதிய முதல்வர் பஜன்லால் 27 இலாகாக்களைத் தம் பொறுப்பில் வைத்துக் கொண்டிருக்கிறார்! ஆம், 27 இலாகாக்களுக்கு இவர் மந்திரி! அதுவும் பொது நிர்வாகம், உள்துறை, பொதுத்தொடர்பு, திட்டம், நீதி, கல்வி போன்ற முக்கியமான இலாகாக்கள்!

இது ஒரு 'ரிக்கார்டு' ஆக இருக்கலாம்!

—சம்பத்குமாரி ஆதாரம்: 'ஹிந்து'

---

மாதிரி இருக்கு. அங்கே போயிடலாம். புறப்படு!'' என்று உத்தரவு போட்டு விட்டு, அவசரம் அவசரமாகத் துணிமணிகளையும் ஒரு டிரங்க் பெட்டியில் திணிக்கத் தொடங்கினான். ''நான் வேணுமானால் இந்த வீட்டை விட்டு வெளியே போயிடறேன். நீங்கள் எங்கேயும் போக வேண்டாம்!'' என்று சொல்லிச் செல்லம்மாள் குறுக்கே விழுந்து மறித்தாள். அவன் மகனும் மருமகளும் சேர்ந்து அவளை நெட்டித் தள்ளி விட்டுப் புறப்பட்டு விட்டனர்.

அவர்கள் போன பிறகுதான் செல்லம்மாளுக்கு ஒரு விஷயம் தெரிய வந்தது. அது முன்னமேயே தெரிந்திருந்தால்கூட, யாருடனும் சண்டை சச்சரவுகளை விரும்பாத அவளால் எதுவும் செய்திருக்க முடியாதுதான்!

முதல் நாள் மாலையில், அக்கம் பக்கத்து வீடுகளைச் சேர்ந்த குஞ்சம்மாளும் அலமேலுவும் கிளியம்மாளை எதிர் வீட்டில் சந்தித்து, ''நீண்ட காலமாகக் கம்மனாட்டியாயிருக்கிற உன் அத்தையாலே நீ சந்தோஷமா வாழறதைச் சகிக்கக்க முடியாதுதான்! உன் அப்பன் நாலு ரூம் போட்டு பத்து ஜன்னல் வைச்சுப் பெரிசா வீடு கட்டி வைச்சிருக்காரு! அங்கே வேறு யாருமில்லே. நீ உன் புருஷனை அழைச்சுகிட்டு அங்கேயே போயிடேன்!'' என்று தூபம் போட்டிருந்தனர். அதைத்தான் இப்போது அந்த எதிர்வீட்டுக்காரியே வந்து செல்லம்மாளிடம் பரம ரகசியமாகச் சொல்லிவிட்டுப் போனாள்.

செல்லம்மாள் செய்வதறியாது திகைத்துப் போய் அப்படியே உட்கார்ந்துவிட்டாள்!

கிளியம்மாளும் கணேசனும் அந்த பாதையோரக் கோவிலுக்கு முன்னால் சற்று நின்று மீண்டும் புறப்பட்ட போது இருள் கவியத் தொடங்கி யிருந்தது. கணேசன் மனத்திலும் இருள் அப்படியேதான் இருந்தது. மனைவியை அடக்கி ஆண்டிருக்க வேண்டாமா? அவள் பேச்சைக் கேட்டுத் தாயாரை வயதுக் காலத்தில் நிராதரவாய் விட்டு விட்டுப் புறப்பட்டு வந்திருக்கலாமா? என்றெல்லாம் யோசித்தான்.

இன்னும் சில அடிகள் நடந்து இடக் கைப் புறமாகத் திரும்பினால் அவனது தெருமுனை!

கிளியம்மாள் இப்போது தனக்குத்தானே சிரித்துக் கொண்டாள். கிளியம்மாளின் தாய் காலமான பிறகு கிளியம்மாள் அந்த வீட்டில் அதிக காலம் இருக்கவில்லை.

அவள் கல்யாணத்துக்கு முதல்நாள் அவள் தந்தை அவளை மிக்க வாஞ்சையுடன் நெருங்கி, ''நான் உனக்கு நகைகள் செய்து போடவில்லையென்று நீ வருத்தப் பட்டுக் கொள்ளாதே. இந்த வீட்டையே நான் உனக்குத் தானே வைத்திருக்கிறேன்! பெற்ற மகளுக்குக் கொடுக்காமல் இதை வேறு யாருக்கு நான் கொடுக்கப் போகிறேன்?... என் அக்காள் செய்து போடுகிற நகைகளை அணிந்துகொண்டு சந்தோஷமாகக் கல்



யாணம் செய்து கொள்!... இந்தக் கல்யாணத்துக்குப் பிறகு நான் உன்னிடம் வந்து விடுவேன். இல்லையெனில், உங்களையெல்லாம் இங்கேயே அழைத்து வைத்துக் கொள்வேன். இதுதான் நடக்கப் போகிறது!'' என உருக்கமாகக் கூறினான்.

அந்த நினைப்பும் இப்போது ஒளியம்மாளுக்கு ஏற்பட்டது. 'இனி அப்பாவின் ருசிக்குத் தக்கவாறுதான் சமையல் செய்ய வேண்டும்!'

தெருவோர மின் விளக்குகள் இன்னும் எரியத் தொடங்கவில்லை. ஒளியம்மாள் கொஞ்சம் முன்னே நடந்து தன் தெருவினுள் நுழைந்தாள்.

அதோ... அதோ... அவள் வீடு. தன் வீட்டு வாசலில் அந்தப் பெட்ரோமாக்ஸ் விளக்கு வெளிச்சத்தைப் பார்த்த போது முதலில் அவள் என்னவோ ஏதோ என்றுதான் நினைத்தாள். சில அடிகள் நடந்த பின்னர், எதிர் வீட்டிலிருந்து வந்த தன் தகப்பனின் கோலத்தை அந்த வெளிச்சத்தில் பார்த்ததும், வாசலின் இருபுறங்களிலும் திண்ணைகளை யொட்டினாற்போல் குலை வாழை மரங்கள் நிறுத்தி வைக்கப்பட்டிருப்பதைக் கண்டதும் பெரிதும் குழப்பமுற்றவளாய்த் திரும்பித் தன் கணவனைப் பார்த்தாள் ஒளியம்மாள். அவ்விருவரையும் தன் வீட்டு வாசல் இருட்டில் நின்று கவனித்துக் கொண்டிருந்த பக்கத்து வீட்டுக்காரி, இப்போது ஒளியம்மாளைப் பெயர் சொல்லி அழைத்து விட்டுத் தன் வீட்டுக்குள் முன்னே நடந்தாள்.

ஒளியம்மாளும் அவள் கணவனும் அந்த வீட்டுக்குள் நுழைந்தனர்.

''அது சரி, நீ கேள்விப்பட்டுத்தான் வந்தியா? இல்லே, தற்செயலாய் வந்தியா?'' எனக் கேட்டாள் அந்த வீட்டுக்காரி.

''எனக்கு ஒண்ணும் புரியல்லியே? என்ன இதெல்லாம்?'' என்றாள் ஒளியம்மாள்.

''உன் அப்பன் கலியாணம் பண்ணிக்கிட்டாண்டி!... உன் அம்மா செத்து இன்னும் மூணு மாசம் கூட ஆகல்லே; உன் கல்யாணம் நடந்து ஒரு மாசந்தான் ஆகியிருக்கு. அதுக்குள்ளே ஒன் அப்பன் இன்னொரு பெண்டாட்டியைத் தேடிக்கிட்டான். இன்னைக்குக் காலையிலேதான் பக்கத்திலேயிருக்கிற கிடாரத்தம் பாளையத்து அம்மன் கோவிலிலே கல்யாணம் நடந்தது. பொண்ணும் அந்த ஊர்க்காரி தானும். யாரோ அவன் சிநேகிதன் ஒருத்தனின் பொண்ணும். எங்களுக்கெல்லாம் நேத்து ராத்திரிதான் தெரியும். 'உன் மகளுக்குச் சொன்னியா?'ன்னு நான் கேட்டேன். என் பொண்ணுக்கு உடம்பு சரியில்லே; ஆஸ்பத்திரியிலே சேர்த்திருக்காங்க. அதனாலே, அங்கிருந்து யாராலும் வர முடியாது!'ன்னு சொன்னான்.

''இன்னைக்குக் காலையிலே யாரோ கிண்டிக் கிளறிக் கேட்டதற்கு, 'என் மகளுக்குத் தெரிஞ்சிருந்தால் இப்போ இந்தக் கல்யாணம் நடந்திருக்குமா? அவளுக்கு என் வீட்டின் மேல் ஒரு 'குறி' இருக்கு. அவள் சின்ன ஆள் இல்லே; அழுது ரகளை பண்ணி, ஊரைக் கூட்டிக் காரியத்தையே கெடுத்திருக்க மாட்டாளா?'ன்னு சொன்னானாம்!''

ஒளியம்மாள் பற்களை 'நறநற'வென்று கடித்துக் கொண்டாள். அவளைப் பார்த்துச் சிரித்தான் கணேசன். அந்த வீட்டுக்காரி மேலும் சொன்னாள்: ''பெற்றவர்களுக்குத் தெரியாமல் பிள்ளையோ பெண்ணோ கல்யாணம் செய்து கொள்வது பெரிய விஷயம் அல்ல. சொந்த மகளுக்கே தெரியாமல் தந்தை கல்யாணம் செய்து கொண்டு வந்து நிற்பதை இப்போதுதான் நான் பார்க்கிறேன்!''

கணேசனுக்கு இப்போது அசாத்தியமான துணிச்சல். அவன் ஒளியம்மாளைப் பார்த்து நகைத்து விட்டு அந்த வீட்டுக் காரியிடம் சொன்னான்: ''இவள் என் அம்மாவிடம் சண்டை போட்டுக் கொண்டு தகப்பன் வீட்டில் வாழப் புறப்பட்டு வந்தாள். இவளோடு நானும் வந்ததை நினைத்தால்தான் எனக்கே வெட்கமாக இருக்கிறது.''

ஒளியம்மாளும் இப்போது உணர்ச்சி வசப்பட்டவளாகக் காணப்பட்டாள். தன் கணவனைத் திரும்பிப் பார்த்து, '''நான் வெளியே போய்விடுகிறேன்.' நீங்கள் வீட்டிலேயே இருங்கள்!' என்று சொன்ன அத்தையைப் பாடாய்ப் படுத்தி விட்டு வந்த எனக்கு இந்த அனுபவம் தேவைதான்! என் அப்பன் முகத்தில் திரும்பவும் விழிக்காமல் இப்பவே நாம் நம் மாளிகைக்கே திரும்பி விடுவோம். கிழக்கே போன ரயிலும் தரங்கம் பாடியில் நின்று விட்டு உடனடியாகவே திரும்பி விடும். சீக்கிரம் புறப்படுங்க!'' எனச் சொல்லி விட்டு அவசரமாகக் கீழே குனிந்து தரையிலிருந்த தன் பெட்டியைத் தூக்கி இடையில் வைத்துத் தாங்கினாற் போல் அணைத்துப் பிடித்துக் கொண்டு நடந்தாள்.

கணேசன் இப்போது கைகளைப் பரக்க வீசியபடி முன்னே நடந்து கொண்டிருந்தான்.

சில நாட்களாக எங்க வீட்டு 'ஜிம்மி'யும் எதிர் வீட்டு 'டாமி'யும் 'வள் வள்...' என்பதற்கும் பதிலாக 'லவ்.. லவ்...' என்று குரைக்கின்றன!
— ஜப்பார்



# ராஜாஜி வாழ்க்கை வரலாறு

## ராஜ்மோகன் காந்தி

சுயா காங்கிரஸில் நேரடியாகக் கருத்து வேற்றுமை கொண்டு மோதிய பிறகு, ஸி. ஆர் ஆசிரம வாழ்க்கை மேற்கொண்டார். மோதிலால் சட்டசபைக்குச் சென்றார். ஆனால் மறுபடி அவர்கள் போர்க் களத்தில் சந்தித்துக் கொள்ளத்தான் செய்தனர். சட்டசபைப் பிரவேசத்தால் ஒரு பயனுமில்லை என்று மோதிலால் ஒருவழியாக ஒப்புக் கொண்டார். அந்த மார்க்கத்தில் நமக்கு நம்பிக்கை போய் விட்டது என்றும் சட்ட சபைகளைக் கைவிட வேண்டியதுதான் என்றும் அவர் ஸி. ஆரிடம் கூறினார். நோய்வாய்ப் பட்டிருந்த போதிலும் உப்பு சத்தியாக்கிரஹம் தொடர்பாக மோதிலால் வீரத்துடனே போர் புரிந்திருந்தார்.

அலகாபாத்தில் அவர் நோய்ப் படுக்கை அருகே சென்று ஸி. ஆர். சில வார்த்தைகள் பேசினார். மோதிலால் நேருவால் "நமஸ்காரம்" மட்டுமே கூற முடிந்தது. பிப்ரவரி 6ம் தேதி முடிவு ஏற்பட்டது. "தேசம் தனது மகத்தான மனிதர்களுள் ஒருவரை இழந்து விட்டது" என்றார் ஸி. ஆர்.

சிறையிலிருந்து விடுதலை பெற்றதன் எதிரொலியாக வைஸ்ராயுடன் பேச்சு வார்த்தை நடத்துமாறு மகாத்மாவுக்கு காரியக் கமிட்டி அங்கீகாரமளித்தது. காந்தி பேட்டி கோரிய போது உடனடியாகக் கிடைத்தது. டில்லிக்கு அவருடன் காரியக் கமிட்டியினரும் சென்றனர்.

இர்வின் பிரபுவும் அவர் மனைவியும் அப்போதுதான் தங்கள் புதிய மாளிகைக்குள் குடி பெயர்ந்திருந்தனர். அசைக்க முடியாத பிரிட்டிஷ் ஆட்சியின் கம்பீரத்தை உணர்த்தும் சின்னமாகச் சிவந்த பாறைக் கற்களால் உருவாக்கப்பட்ட மாபெரும் கட்டிடம் அது. அத்தகைய நம்பிக்கையை, அரண்மனையை உருவாக்கிய சிற்பி லுடையென்ஸ் ஓராண்டுக்கு முன் கொண்டிருந்தால் அது நியாயமாயிருந்திருக்கலாம். ஆனால் இப்போதோ கிண்ணம் கவிழ்த்தாற் போன்ற அரண்மனையின் மாபெரும் கூரை மீது ஒரு கேள்விக் குறி நின்றது.

பிப்ரவரி 17ம் தேதி பிற்பகல் இர்வின், காந்தியைப் புதிய வைஸ்ராய் மாளிகையில் வரவேற்றார். லண்டனில் பாராளுமன்ற உறுப்பினர் வின்ஸ்டன் சர்ச்சில் மறக்க முடியாத சொற்களைக் கூற இந்தச் சந்திப்பு வழி வகுத்துத் தந்தது:

"லண்டனில் படித்துத் தேறிய வழக்கறிஞர் புரட்சியாளராக மாறி, இப்போது ஒரு பிச்சைக்காரச் சாமியாராக வேஷம் போட்டு வைஸ்ராயின் அரண்மனைப் படிகளில் அரை நிர்வாணமாக ஏறிச் செல்வதைக் காண வயிற்றைக் குமட்டுகிறது. அரசை எதிர்த்து சட்ட மறுப்பு இயக்கத்தை நடத்திக் கொண்டிருக்கும் போதே காந்தி, சக்கரவர்த்தியின் பிரதிநிதியுடன் சரிசமமாக அமர்ந்து பேச்சு வார்த்தை நடத்துவது அபாய அறிவிப்பாக விளங்குகிறது."







பதவிக் காலம் முடிகிற நிலையில் இர்வின் சீக்கிரமே இங்கிலாந்து திரும்ப இருந்தார். தம்முடன் ஒரு சமரசத் தீர்வை எடுத்துச் செல்ல விரும்பினார்; சுதந்திர இயக்கத்தைச் சட்ட பூர்வமாக ஒடுக்குவது தமது கடமை என்று எண்ணினார் இர்வின். அதே நேரத்தில் காந்தியும் கடமை உணர்வால் உந்தப்பட்டுக் காரியம் செய்கிறார் என்பதை அவர் ஒப்புக் கொள்வதாகவும் தோன்றியது.

இரண்டு வார காலம் இர்வினும் காந்தியும் பேச்சு வார்த்தை நடத்தினர். ஒவ்வொரு சந்திப்பும் சராசரி மூன்று மணிநேரம் நீடித்தது. இந்தக் கால கட்டத்தில் நம்பிக்கையும் ஏமாற்றமும் மாறி மாறி ஏற்பட்டன. டாரியாகஞ்ச் பகுதியிலிருந்த டாக்டர் அன்ஸாரியின் இல்லத்தில் தங்கியிருந்த மகாத்மா வைஸ்ராய் மாளிகைக்கு ஐந்து மைல் நடந்தே



"இப்ப என்னடா தம்பி பண்றே?"
"அப்பாவுக்கு உதவியா இருக்கேன்"
"வெரிகுட்! அப்பா என்ன பண்றார்?"
"வீட்டிலே சும்மாதான் இருக்கிறார்"

— எம். ஏ. அப்துல்காதர்

செல்வார். நடந்தே திரும்பி வந்து காரியக் கமிட்டியிடம் அறிக்கை சமர்ப்பிப்பார்.

ஸப்ரூவும் ஜெயகரும் நம்பிக்கை ஒளி அணையாது காப்பதிலேயே தீவிர நாட்டம் கொண்டிருந்தனர். லிபரல் கட்சித் தலைவர்களான இவர்கள், லண்டன் வட்டமேஜை மகாநாட்டில் கலந்து கொண்டு அப்போது தான் திரும்பி யிருந்தார்கள். அம்மகாநாட்டில் காங்கிரஸ் பங்கு பெறாத போதே இந்தியாவின் எதிர்காலம் விவாதிக்கப்பட்டிருந்தது. சமரச வாதிகளான இந்த இருவரும் 'சமாதானச் சிற்பிகள்' என்று பிரசித்தமாயினர். காந்தி அவர்களை 'துணைவைஸ்ராய்கள்' என்று வேடிக்கையாக அழைத்தார். வைஸ்ராய் மாளிகையில் நடந்த பேச்சுக்களில் ஒரு சமயம் மகாத்மாவுடன் ஸி. ஆரும் சேர்ந்து கொண்டார்.

போராட்டமாயினும் சரி, சமரசப் பேச்சு வார்த்தைகளாயினும் சரி மகாத்மா கைதேர்ந்தவர். இப்போதும் ஓர் ஒப்பந்தத்தை அவர் உருவாகச் செய்தார். இதற்குச் சமாதானச் சிற்பிகள் உபயோகமாயிருந்தனர் எனில் ஸி. ஆரும் தான். பி. ஸிவராவ், ''விடா முயற்சியுடனும் ஆற்றலுடனும் ஸி. ஆர். அமைதியாகப் பாடுபட்டார்'' என வர்ணித்திருக்கிறார்.

முக்கியமாக உப்புச் சட்டத்தையொட்டி அவர் பெரிதும் உதவினார். உப்புச் சட்டத்தை மீறியதானது பெரும் போராட்டமாக வளர்ந்து விட்டிருந்தது. இந்த யுத்தத்தில் அரசுக்குப் பலமாக அடி பட்டிருந்தது. ஆனால் அது தோற்றுப் போகவில்லை. உப்புச் சட்டத்தை அரசு அடியோடு நீக்கி விடும் என்று எதிர்பார்ப்பதற்கில்லை. அதே நேரத்தில் அதில் ஒரு சாதகமான மாறுதல் இல்லாமல் சமாதானத்துக்குக் காங்கிரஸ் ஒப்புக் கொள்ள முடியாது.

ஸி. ஆர் உதவியுடன் ஒரு சமாதான உடன்படிக்கை உருவாயிற்று: உப்பளங்களுக்கு அருகே வசிப்பவர்கள் தாங்களாகவே தங்களுக்குத் தேவையான உப்பை எடுக்கலாம்; தங்கள் வட்டாரத்துக்குள் வியாபாரமும் செய்யலாம். இந்தச் சமரசத் திட்டத்தை ஸி. ஆர். அரசின் இடைத் தரகர்களான ஸப்ரூவும் ஜெயகரும் ஏற்கும்படி செய்தார். இந்திய ஐ. ஸி. எஸ். உத்தியோகஸ்தர்களான பி. ராமராவ், அக்பர் ஹைதாரி போன்றோரும் ஏற்கச் செய்தார். ஸிவராவ் கருத்துப்படி, இத்திட்டத்தை காந்தி ஏற்குமாறு செய்த திறம் ஸி. ஆருக்கு ஒரு பங்கு உண்டு.

பேச்சு வார்த்தைகளின் போது ஸி. ஆர். எவ்வளவு தூரம் உபயோகமாயிருந்தார் என்பதை பிரிட்டிஷ் அதிகாரி ஐயான் ஸ்டீபன் ஒரு வர்ணனை சித்திரிக்கிறது. ஸ்டீபன் அக்பர் ஹைதாரி இல்லத்தில் ஸி. ஆரை அத்தருணத்தில் சந்தித்தார். ஸ்டீபன் சொல்கிறார்:

''ராஜகோபாலாச்சாரியிடம் எனக்கு மிகுந்த ஈடுபாடு ஏற்பட்டது. அன்புள்ளம் படைத்தவரும் மிதவாதியும் புத்திசாலியுமான அவர், ஓர் இளம் ஆங்கிலேயனை வெகுவாகக் கவர்கிறார். 'காங்கிரஸ்காரர்கள் எல்லாரும் இவரைப் போல் இருக்க முடியுமானால் எதற்காக இந்த அமர்க்களமெல்லாம்? சின்னச் சின்ன அரசியல் விஷயங்கள் பற்றி ஏன் இந்தியாவும் பிரிட்டனும் சண்டை போட்டுக் கொண்டிருக்க வேண்டும்?' என்றே எனக்குத் தோன்றியது.''

ஸ்டீபன் பின்னால் பத்திரிகையாளராக மாறி நாளா வட்டத்தில் ஸ்டேட்ஸ்மன் பத்திரிகை ஆசிரியரானார். ஸ்டீபனிடம் ஸி. ஆர். ஏற்படுத்திய பாதிப்பு ஸி. ஆரின் ஒரு பலத்தைக் காட்டுகிறது. நியாய உணர்வு என்கிற பலம். 1931இல் டில்லியிலும் அதன் பிறகு பல தடவைகளிலும் ஸி. ஆரிடம் இருந்த இந்தக் குண இயல்பு பல ஆங்கிலேயர்களின் கவனத்தை ஈர்த்திருக்கிறது. பிரிட்டிஷாருடன் போராடும் போது காங்கிரஸ் எப்படியெல்லாம் நடந்து கொண்டது என்றால், அந்தப் பட்டியலில் நியாய உணர்வு என்பதும் இடம் பெறச் செய்தவர் ஸி. ஆர்.

டில்லியில் நடந்த பேச்சு வார்த்தைகள் ஸி. ஆரின் ஆற்றலைப் பிரகாசிக்கச் செய்தது என்றாலும் அதன் முக்கிய விளைவு பேச்சு வார்த்தைகளில் ஈடுபட்ட தலைவர்களின் — இர்வின், காந்தி ஆகியோரின் மதிப்பும் கௌரவமும் பன்மடங்காக உயர்ந்ததுதான். அவர்களுடைய ஒப்பந்தம் அதிகார பூர்வமாக இர்வின் — காந்தி ஒப்பந்தம் என்று வர்ணிக்கப் பட்டது. இந்தியர்கள் அதனை காந்தி — இர்வின் ஒப்பந்தம் என்றனர். காங்கிரஸ் கடந்த காலத்தில் எதற்கெல்லாம் போராடியதோ அதையெல்லாம் காந்தி — இர்வின் ஒப்பந்தம் வழங்கி விடவில்லைதான். சுதந்திரம் என்பது ஒப்பந்தத்தில் குறிப்பிடப் படவேயில்லை. உப்புச் சட்டம் கூட மாற்றப் பட்டதேயன்றி வாபஸ் பெறப்படவில்லை.

அவ்வாறிருக்க இந்தியா, காந்தி — இர்வின் ஒப்பந்தம் ஏற்பட்டதும் மெய் சிலிர்ப்பானேன்?

(தொடரும்

தமிழாக்கம்: வி. ராஜேந்திரன்





''எங்க பாட்டிக்கு மூன்று காதுடா!'';
''எப்படி?''
''வலக்காது. இடக்காது. கேக்காது!''
— கோவி. பரஞ்ஜோதி



# உங்கள் கணவரின் கனவை நனவாக்குவது எப்படி...

நீங்கள் இளமையாயிருந்தபோது நீங்களும் உங்கள் கணவரும் போட்ட எதிர் காலத் திட்டங்கள் நினைவிருக்கிறதா? உங்கள் மகளின் திருமணம்—உங்கள் மகனின் பட்டப் படிப்பு.

அப்போது வாழ்க்கை எளிமையாக இருந்தது. குறைந்த செலவுகள். உங்கள் கணவரின் சம்பளம் ஒரே சீராக இருந்தது. கனவுக் கோட்டையைக் கட்டுவது எவ்வளவு எளிதாயிருந்தது! தவிர உங்கள் கணவரின் ஆயுள் இன்சூரன்ஸ் பாலிஸி, ப்ராவிடண்ட் நிதி அல்லது இதர சேமிப்புகளின் தொகை உங்களுக்கு எவ்வளவோ பாதுகாப்பாக இருந்தது.

ஆனால் வாழ்க்கை நிலையற்றது. இன்று குடும்பச் செலவுகளை சமாளிப்பது சாமானிய விஷயம் அல்ல. உங்கள் கணவர் உழைத்து ஊதியம் பெற இயலாதவராகி விட்டால் எதிர்காலம் என்னாவது? கானல் நீர் வாழ்க்கையாகி விடாதா? கவனமாக சேர்த்த சேமிப்பு எடுக்க எடுக்கக் குறையாமலா இருக்கும்? அவருடைய கனவுகள் நிறைவேறுமா?

ஸ்டேட் பாங்குக்கு வாருங்கள். உங்கள் பணத்தை எப்படி விவேகமாக முதலீடு செய்வது என்பதற்கு வழி காட்டுகிறோம். அதனால் உங்களுடைய மாதச் செலவுகளை சமாளிப்பதோடு வருங்கால பொறுப்பு களையும் உங்களால் நிறைவேற்ற வதற்கு முடியும். நீங்கள் வாழ்நாள் பூராவும் சேமித்த தொகை எடுக்க எடுக்க என்றும் குறையாது என்பதற்கு வழி கூறுகிறோம்! எடுத்துக்காட்டாக, 20,000 ரூபாய் தொகையை எங்களிடம் 5 ஆண்டுகளுக்கு அல்லது அதற்குமேல் டெபாசிட் செய்தால், நாங்கள் குறிப்பிட்ட காலத்திற்கு ஆண்டு ஒன்றுக்கு ரூ. 1800 உங்களுக்குத் தருவோம். உங்களுடைய டெபாசிட் முதிர்வடையும் போது நீங்கள் ரூ. 20,000 பூராவையும் திரும்பப் பெறுகிறீர்கள். ஸ்டேட் பாங்கில் நாங்கள் இதை நிலையான வைப்பு நிதி என்று அழைக்கிறோம். நீங்களோ ''அச்சமின்றி வருங்காலத்தை எதிர்நோக்கி வாழ உதவும்'' திட்டம் என்று இதை கூறலாம். இந்தியாவில் மிகப் பெரிய பாங்க் என்ற முறையில், ஸ்டேட் பாங்க் இன்னும் பல திட்டங்களை வழங்குகிறது. நாடு பூராவும் 5000 அலுவலங்கள் இருப்பதால், உங்களுக்கு அருகாமை யிலேயே நிச்சயம் ஒரு கிளை அலுவலகம் இருக்கும். முற்றிலும் பாதுகாப்பானது. மூலதனமும் காப்பு நிதியும் சுமார் 155 கோடி ரூபாயைக் கொண்டுள்ள தால், உங்களுடைய முதலீடு முற்றிலும் பத்திரமாக இருக்கும் என்பதற்கு உறுதி அளிக்கிறோம்

**ஸ்டேட் பாங்க்**

பணம் பெருக்கும் திட்டத்திற்கு நாங்கள் கூறும் இலவசமான ஆலோசனைக்கு எங்கள் அலுவலகம் வாருங்கள்.

CHAITRA-SBI-410-TAM Rev. 1

# 31 - 40

**தெய்வம்:** ''நிரந்தரநடிகனுக தேவர் படத்தில் நடி!'' — இது எங்கள் ஊர் மக்கள்வாக்கு. காரணம் தேவரின் சொந்த ஊர் எங்கள் கோவை மாவட்டம்தான், எனது ஊருக்கும், அவரது ஊருக்கும் இடையில் எட்டு மைல் தான். ஊர் மக்கள் சொல்வதைக் கேட்டுச் சென்று அவரைப்பார்த்தேன். ''என்னப்பா ரொம்ப இளேப்பா இருக்கே. இப்பல்லாம் எம்.ஜி.ஆர். சரோஜா தேவி லவ் பண்ற சீன். நீ லவ் சீன் பண்ணின, சின்னப் பசங்களே உட்டு விளையாட வைச்சுட்டானுக'' அப்படீன்னு சொல்வானுக. கொஞ்சம் கஸரத் வேலையெல்லாம் செய்து உடம்பைத் தேத்திக் கிட்டு வா'' என்று கூறி அனுப்பிவிட்டார்.

அதற்கு ஆறு வருடங்கள் கழித்து நான் தேவர் பிலிம்ஸில் காலடி எடுத்து வைத்து நடித்த படம் ''தெய்வம்!''

**அன்னே அபிராமி:** தயாரிப்பாளரான திரு வேலுமணி தாமே டைரக்ட் செய்த படம் இது. தெலுங்கிலும், தமிழிலும் தயாரிக்கப் பட்டது. பாகப் பிரிவினே போன்ற பல வெற்றிப் படங்களேத் தயாரித்தார் வேலுமணி. பணமும் புகழும் சேர்ந்தன. இதையெல்லாம் வைத்து ''ராஜ்குமார்'' என்ற இந்திப் படத்தை அறுபது லக்ஷ ரூபாய் பொருட் செலவில் எடுத்தார். பொருள் செலவானதுதான் மிச்சம்!

சில ஆண்டுகளுக்கு முன்பு அவர் ஆர்க்காடு ரோடில் நடந்து போய்க் கொண்டிருந்த போது மேஜர் சுந்தரராஜன் அதிர்ச்சியுற்றுக் காரை நிறுத்தி ''வாங்கண்ணே காரில் போகலாம்'' என்று கூப்பிட்ட போது, ''வேண்டாம் சுந்தரராஜன்! நடக்கவேண்டிய காலத்தை நடந்தே தீர்த்துடணும்!'' என்று பதில் கூறினர். வாழ்க்கையில் ஏற்பட்ட வெற்றி தோல்விகளால் தம் மனம் பாதிக்கப் படாமல்பார்த்துக்கொண்ட பெரியவர் அவர். இப்போது பல படங்களே இயக்குகிறர் என்று கேள்விப்பட்டு மகிழ்கிறேன்.

**சக்திலீலே:** நான் எப்பொழுதுமே கலகலப் பாக இருப்பவன். அவ்வப்போது ஜோக் என்னிடமிருந்து புறப்படும். இதைக் கண்டு தானே என்னவோ டைரக்டர் ராமண்ணு அவர் இயக்கிய இப் படத்தில் எனக்கு நாரதர் வேடம் கொடுத்தார். நான் நீண்ட

ராஜராஜசோழன் படத்தில் முத்துராமன், சிவகுமார், சிவாஜிகணேசன், லக்ஷ்மி >

⁙ பி. ஆர். பந்துலு



⁙ ஜீ. சபாபதி



⁙ ராமண்ணு



⁙ வேலுமணி





சித்ரமகால் கிருஷ்ணமூர்த்தி

ஜெயசுதாவுடன் சிவகுமார்





# சிவகுமார் 101

வசனம் பேசுவதைப் பார்த்து, ராமண்ணாவே வாய் விட்டுச் சிரித்துவிட்டார் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

**பால பாரதம்:** என்னுடன் 'சரஸ்வதி சபதம்' படத்தில் நடித்த் தெலுங்கு நடிக நண்பர் ஹரிநாத் கேட்டுக் கொண்டதன் பேரில் இந்தப் படத்தில் மஹாவிஷ்ணுவாகக் கௌரவ வேடத்தில் நடித்தேன். தூய தமிழ் பேசி நம் புராணப் படங்களில் நடிப்பதைவிட மிகவும் சிரமமானது தெலுங்குப் புராணப் படங்களில் பேசி நடிப்பது.

**கங்கா கௌரி:** டைரக்டர், தயாரிப்பாளர் மட்டுமல்ல; திரு பந்துலு நடிகரும்கூட. அவர் உருவாக்கிய படங்கள் எல்லாம் தமிழ் திரை உலகுக்குப் பெருமை தேடித் தந்தவை. உதாரணம், வீரபாண்டிய கட்டபொம்மன், கப்பலோட்டிய தமிழன்.

இவர் மைசூருக்குச் சென்ற பொழுது அங்கே மாரடைப்பினால் மயங்கி விழுந்து உயிர் பிரிவதற்கு முன் ''நாளை ஏழாம் தேதி. என் கையால் என் வேலையாட்களுக்குச் சம்பளம் தரமுடியாமல் போய் விட்டதே'' என்று வருத்தப்பட்டாராம். நல்லவர்களை எல்லாம் தமிழ்ப்பட உலகம் இழந்துகொண்டிருக்கிறது.

**அரங்கேற்றம்:** இப்படத்தில் உணர்ச்சி மயமான ஒரு கட்டம். டைரக்டர் பாலசந்தர், ஒரு மணிநேரமாக அதைப் பிரமிளாவுக்கு எடுத்துச் சொல்லி பிரமிளாவை அந்த உணர்ச்சிக்கு ஏற்ப மாற்றிக் கொண்டிருந்தார். காமிரா இயங்கியது. மிகப் பெரிய அந்த வசனத்தை பிரமிளா பிரமாதமாகப் பேசி நடிக்க, ஒரே டேக்கில் ஓ. கே. ஆகியது. 'பேக்கப்' என்று கூறிவிட்டு பாலசந்தர் போய் விட்டார். அதுதான் பாலசந்தர்!

**காரைக்கால் அம்மையார்:** ஆண்டவன் வேடங்கள் பலவற்றை என்னைப் போட வைத்த திரு ஏ. பி. என். இப்படத்தில் எனக்குக் கொடுத்தது சிவன் வேடம். அந்த வேடத்தில் நான் ஆனந்த நடனம் வேறு ஆடுகிறேன்! யாருடன்? நடனத்தை முறையாகப் பயின்று பல கச்சேரிகள் செய்துள்ள ஸ்ரீவித்யாவுடன். என் திரையுலக வாழ்க்கையில் இது மறக்க முடியாதது!

**பாரதவிலாஸ்:** அழகுமுகம், சிலைபோன்ற உடல், குறுகுறுக்கும் விழிகள் இவை உள்ள திருமதி கே. ஆர். விஜயாவுக்குப் பிறகு அதே போன்று அழகுடைய இளநங்கை இப்படத்தில் என்னுடன் நடித்தார். அவர்தான் அன்றைய செல்வி, இன்றைய திருமதி ஜெயசுதா!

**ராஜராஜ சோழன்:** நாடகமாக நடிக்கப்பட்டுச் சிறப்புற்ற இதைப் படமாகத் தயாரித்தார் திரு உமாபதி. தஞ்சைப் பெரிய கோயிலையே வாகு ஸ்டுடியோவில் நிர்மாணித்தனர்.

சினிமாஸ்கோப், வண்ணப்படம், சரித்திரப்படம், மிக நீண்ட நட்சத்திர நடிகர் நடிகையர் பட்டியல் இவை எல்லாம் உள்ளன என்று அறிந்த ரசிகர்கள் மிகமிக அதிகமாக எதிர்பார்த்தார்கள். குறிப்பாக சண்டைக் காட்சியில் ஆயிரக்கணக்கான குதி[illegible]ரைகளும், யானைகளும் மோதும் என்று எதிர்பார்த்தார்கள். அப்படி எடுக்காததால் ஏமாந்தார்கள்.

**சண்முகப்ரியா:** தேன் கிண்ணம், ஹலோ பார்ட்னர், இரண்டுமே நகைச்சுவைப் படங்கள். தயாரித்தது — சித்ரமகால் கிருஷ்ணமூர்த்தி. புண்ணியம் தேடிக்கொள்ள இந்தப் பக்திப் படத்தை அவர் எடுத்ததன் விளைவு கையைக் கடித்தது! —பேட்டி: '**சலன்**'

TEXTILES, SUGAR,
INDUSTRIAL CHEMICALS,
ALCOHOLIC BEVERAGES,
VANASPATI, PVC, RAYON TYRE CORD,
FERTILIZERS,
ELECTRONIC CALCULATORS,
IRON CASTINGS.

**IN THE SERVICE OF THE NATION**



**DCM** THE DELHI CLOTH AND GENERAL MILLS CO. LTD., DELHI



# வா மகளே!

ரா.வேங்கடசாமி

“சார்! நீங்கள் கோபித்துக் கொண்டாலும் சரி... இனி மேல் நான் உங்கள் நண்பரின் வீட்டிற்குப் போக மாட்டேன். அவரும், அவரது பெண்ணும் எப்படியோ போகட்டும். முடிந்தால் வேறு 'ஆயா' பார்த்துக் கொள்ளட்டும்'' என்று கோபமாகவும், கண்டிப்பாகவும் சொல்லி விட்டாள் சாரதா.

சங்கரனின் பத்து வயது மகளைப் பார்த்துக் கொள்ளவும், அவனது வீட்டை நிர்வகிக்கவும், சாரதா என் சிபாரிசின் பேரில்தான் அங்கே ஆயாவாகப் போனாள். சங்கரனின் மனைவி லலிதா இறந்த பிறகு, அவனுக்குத் திருமண வாழ்வே வெறுத்து விட்டது. மனைவியை அப்படி நேசித்தான். இரண்டு வருடங்கள் அங்கே வேலை பார்த்த பிறகு, இப்போது சாரதா, அந்த வேலையை வேண்டாமென்கிறாள்.. அதற்கு அவள் சொல்லும் காரணங்கள்....?

சங்கரன் தன் மகளை ஒரு நாளாவது அன்போடு 'சுமதி' என்று பெயர் சொல்லி அழைத்ததில்லையாம். ''பேயே... பிசாசே...'' என்றுதான் கூப்பிடுவானாம். வாரத்திற்கு இரண்டு நாட்கள் சுமதிக்கு நிச்சயம் அடி விழுமாம். இந்த அடி விஷயத்தில் மட்டும் சாரதா குறுக்கிடக் கூடாதாம்!

அவன் மனைவி லலிதா சுமதி பிறந்த தினத்தன்றே உயிர்விட்டாள் என்கிற காரணத்திற்காக மகள் மீது அவனுக்கு வெறுப்பு! மனைவிக்குப் பதில் பிறந்த குழந்தையை உயிராக வளர்ப்பது உலக வழக்கம். இங்கே அதற்கு நேர் எதிராக எல்லாமே நடக்கிறது. வேண்டாத மகள்...! பாவம். முன்பு இருந்த ஆயாவும் இதே காரணத்தினால்தான் வேலையை விட்டுப் போய் விட்டாள். எவ்வளவோ ஆயாக்கள் மாறி விட்டார்கள்.

குழந்தையைப் பார்க்கும் போதெல்லாம் தன் மனைவியின் ஞாபகம் வருகிறதென்றால், பெண்ணை எங்காவது விடுதியில் சேர்த்துவிட வேண்டியதுதானே? அவளை வீட்டில் வைத்துக் கொண்டு இப்படி இம்சிப்பானேன்? எனக்குப் புரியவில்லை.

சாரதா சொன்ன விஷயங்களில் இன்னும் சில..... 'நான் போய் அங்கே வேலையில் சேரும் போது சுமதிக்கு எட்டு வயது இருக்கும் என்று நினைக்கிறேன். ரொம்ப நாள் பழகியவளைப் போல அவள் என்னிடம் ஒட்டிக் கொண்டாள். தாயின் அன்புக்காக அவள் ஏங்குவது எனக்குப் புரிந்தது. நன்றாகப் பேசும் வழக்கம் அவளுக்கு இருந்தது என்றாலும் அவ்வப்போது அவள் மௌனத்தில் ஆழ்ந்து விடுவாள். எங்கோ பார்வையைச் செலுத்தியபடி வெறித்து நோக்கிக் கொண்டிருப்பாள். அவள் தாயின் படத்தைப் பார்த்துக்கொண்டு நின்றால் நாங்கள் அழைத்தால்தான் அவள் அந்த இடத்தை விட்டு நகருவாள். இதற்கெல்லாம் மேலாக தன் தந்தையின் எதிரிலே வரவே அவள் பயப்படுவாள். சுமதி பள்ளிக்கூடத்திற்குப் போகவே இல்லை. அவளது தந்தை அனுப்பினால்தானே போவாள்? அதைப் பற்றி அவர் கவலைப்பட்டதாகவே தெரியவில்லை.

சும்மா சொல்லக் கூடாது. முந்தின ஆயாக்கள் அவளை நன்றாகவே எழுதப் படிக்கத் தயார் செய்திருந்தார்கள். அதனால், சாப்பிடும் நேரம், தூங்கும் நேரம், அவள் அம்மாவின் படத்தின் முன் நிற்கும் நேரம் தவிர அவள் படித்துக் கொண்டே இருப்பாள். அவளுக்கு என்ன புரிந்ததோ, எனக்குத் தெரியவில்லை. ஒரு தடவை அவள் படித்துக் கொண்டிருந்த புத்தகத்தைப் பார்த்து விட்டு, நான் அடைந்த அதிர்ச்சி கொஞ்ச நஞ்சமல்ல! புத்தகத்தின் தலைப்பு ''பில்லி சூன்யம்.''

அந்தப் புத்தகத்தை நான் மாடியிலிருந்த அவள் தந்தையின் புத்தக அலமாரியில் எப்போதோ பார்த்த நினைவு... இவள் வயதுக்கு.... இவள் படிக்க வேண்டிய புத்தகமா அது?

எந்தக் குழந்தைகளோடும் சேராமல் தனியாகவே வளர்ந்த சுமதி, ஒரு பிரச்னையாகிக் கொண்டு வந்தாள். ஆரம்பத்தில் இருந்ததைப் போல் அவள் என்னிடம் கூட அதிகம் பேசுவதில்லை. கேட்பதற்கெல்லாம் ஒவ்வொரு வார்த்தையில் பதில் சொல்லுவாள்.

எனக்குத் தெரிந்து அவளது பிறந்த தினம் அந்த வீட்டில் கொண்டாடப்பட்டதே இல்லை. அவளது பிறந்த தினம் என்றால், அவளது தாயாரின் இறந்த தினமல்லவா? அவள் தந்தைக்கு அத்தினத்தைக் கொண்டாட எப்படி மனம் வரும்?'.... இதுதான் காரணமாக இருக்குமோ? எனக்குப் புரியவில்லை.



அந்த வருடம் அவளது பிறந்த நினத்துக்கு நானே அவளுக்கு ஒரு பொம்மையை வாங்கிக் கொடுத்தேன். அவளது தந்தைக்குத் தெரியாமல்தான்! அதுதான் அவளிடம் கொடுக்கப்பட்ட முதல் பொம்மை!

அதைப் பெற்றுக் கொண்ட பிறகு அவளது முகத்தில்தான் எவ்வளவு மகிழ்ச்சி!

என்னை இறுக அணைத்து முத்தம் கொடுத்தாள், தன் மகிழ்ச்சியைத் தெரிவிக்கும் வகையில்!

அன்றிலிருந்து அந்தப் பொம்மை அவளுக்கு உறுதுணையாகியது... அதனுடன் ஏதோ பேசிக் கொண்டிருப்பாள். வித விதமாக அலங்காரம் செய்து பார்த்து மகிழ்வாள். அது எப்போதும் அவள் கையில்தான் இருக்கும். ஒரு நிமிடம் கூட அதை அவள் கீழே வைத்து நான் பார்த்ததில்லை. தன் படுக்கையிலும் அதற்கு இடம் கொடுத்தாள். ஓர் அடி உயரம் இருந்த அந்தப் பொம்மை அவள் கையில் படாத பாடு பட்டுக் கொண்டிருந்தது.

பொம்மை வீட்டுக்குள் வந்தபோதிலிருந்து சுமதியிடம் எவ்வளவோ மாறுதல். அவள் முகத்தில் முதிர்ச்சியானதொரு தோற்றம்.... குரலில் ஏதோ ஒரு விதமான கரகரப்பு. மந்திரங்களைப் போல எதையோ உச்சரித்துக் கொண்டிருப்பாள். நான் அருகில் சென்றால் அவள் முணு முணுப்பதை நிறுத்தி விடுவாள்.

ஒரு நாள் எதிர்பாராத விதமாக உங்கள் நண்பர் வீட்டுக்குத் திரும்பி வந்தபோது, சுமதி ஹாலில் சோபாவில் அமர்ந்து, தன் பொம்மையிடம் ஏதோ முணு முணுத்துக் கொண்டிருந்தாள். அதைப் பார்த்துவிட்ட அவர் பேசாமல் போயிருக்கலாம். எரிந்து விழுந்தார். ''இங்கே ஏன் வந்தாய்? உன் அறைக்குள் அடைந்து கிடப்பதுதானே ...? பிசாசே!'' என்று சத்தம் போட்டார். அவள் வேகமாக எழுந்து உள்ளே போனபோது, ''நான் பிசாசாகவே இருந்துவிட்டுப் போகிறேன்'' என்று முணு முணுத்தது என் காதில் தெளிவாகவே விழுந்தது. பெற்ற குழந்தையிடம் இப்படியா நடந்து கொள்வது?

இன்னொரு நாள் சுமதி படித்துக் கொண்டிருந்த புத்தகத்தின் பெயர் ''சூன்யம் செய்வது எப்படி?'' அவள் வயதென்ன? அவள் படிக்கும் விஷயம் என்ன?

எனக்குத் தலை சுற்ற ஆரம்பித்தது. நல்லவேளையாக மயக்கம் வரவில்லை.

அன்றிலிருந்து அந்த வீட்டில் எனக்கு இருக்கவே பிடிக்கவில்லை. என்னை நிலை குலையச் செய்த சம்பவம் இரண்டு தினங்களுக்கு முன்புதான் நடந்தது. மாடி அறையில் இருந்த அவரது சீப்பைக் காணோம். நான் தேடிப் பார்த்தேன். எதற்கெடுத்தாலும் அகப்பட்டவள் நானல்லவா?

சுமதி அதை எடுத்துக் கொண்டு வந்து தன் பொம்மையின் தலை முடியை அதனால் வாரிவிட்டுக்கொண்டிருந்தாள். அதை அவள் அப்பா நேரில் பார்த்து விட்டார். அதைத் தொடர்ந்து என்ன நடந்திருக்கும்?

அவளைப் போட்டு அடித்தார் பாருங்கள்... அப்பப்பா....! அந்தப் பெண் அதற்குப் பிறகும் எப்படிப் பிழைத்திருந்தாள் என்பதே வியப்புக்குரிய விஷயம்தான்!

கேவலம் ஒரு சீப்பு... அவள் அதை எடுத்துக் கொண்டு வந்திருக்கக் கூடாதுதான்.... அதற்காக இப்படியா? சுமதி இவ்வளவு அடிகளையும் வாங்கிக் கொண்டு அதிகமாக அழுதாள் என்றும் சொல்ல முடியாது..... பழகிப் போய் விட்டது! அழுதால் ஆறுதல் சொல்ல நான் ஒருத்திதானே இருக்கிறேன்.... ஆனால் இப்போதெல்லாம் அவள் என்னிடமும் வருவதில்லை. தன் அறைக்குள் போய்க் கதவை மூடிக் கொண்டு விடுவாள். அவள் நிலை எவ்வளவு பரிதாபத்துக்குரியது பார்த்தீர்களா? நான் மட்டும் அன்று விடாமல் அழுது கொண்டிருந்தேன்.



திடுமெனத் தோன்றியது இம்மாறுதல்: சுமதியின் நெற்றியில் பட்டை பட்டையாக விபூதி. அதற்கு மேல் குங்குமம்!

வீட்டில் பல இடங்களில் எலுமிச்சம் பழத்தின் துண்டுகள். புதியவர் யாரோ நடமாடுவதைப் போன்ற பிரமை!

சூழ்நிலை திடீரென மாறிவிட்டது போன்ற ஓர் உணர்வு. 'ஜில்'லென்று குளிர் காற்று அடிக்கும். இது எதனால்?

சுமதி என்னிடம் சரிவரப் பேசுவதேயில்லை. ஏன் இந்த மாறுதல்? அவளிடம் நான் பிரியமாகத்தானே நடந்து கொண்டேன்? ஏன், எதனால் என்று கேட்டால் அவள் பதில் சொன்னால்தானே?

இந்தக் காரணத்தினால் எனக்கு அங்கு இருக்கவே பிடிக்கவில்லை.... அதனால்தான் வந்து விட்டேன்'' என்று சாரதா முடித்தாள்.

ஆங்கில 'திகில்' படம் ஒன்றைப் பார்ப்பது போல் இருந்தது எனக்கு. அவள் சொன்னதையெல்லாம் என்றால் நம்பவும் முடியவில்லை, நம்பாமல் இருக்கவும் முடியவில்லை. ஒரு பத்து வயதுப் பெண் இம்மாதிரியெல்லாம் நடந்து கொள்ள முடியுமா? என் மனம் இருந்த நிலையில் சாரதாவிடம் எந்த விதமான கேள்வியையும் கேட்கத் தோன்றவில்லை. என் மௌனத்தைக் கண்டு அவளாகவே விடை பெற்றுக்கொண்டாள்.

2

**ச**ங்கரனிடம் பேசிப் பார்க்கலாமே என்று அவனுக்குப் ஃபோன் செய்தேன். எடுத்த எடுப்பில் அவனே, ''சாரதா உன்னிடம் வந்து ஏதாவது சொன்னாளா?'' என்று கேட்டான்.

''ஆமாம்'' என்றேன்.

''அவள் சொல்வதையெல்லாம் நம்பாதே. உனக்கு எல்லாவற்றையும் நான் விளக்கிச் சொல்கிறேன்.''

''அப்படியென்றால் நான் நேரில் வரவா?''

''இப்போது வேண்டாம். நான் டாக்டரிடம் புறப்பட்டுக் கொண்டிருக்கிறேன்...''

''ஏன் உன் உடம்பில் ஏதாவது கோளாறு?''

''ஆமாப்பா.... எனது இரண்டு கைகளும் பயங்கரமாக வலிக்கின்றன.... ஏதோ இரும்புக் குண்டுகளைக் கட்டி விட்டது போல் கைகள் கனக்கின்றன...''

''அப்படியா? சரி போய்ப் பார். ஒய்வாக இருக்கும்போது கூப்பிடு. நான் வருகிறேன்'' என்று கூறிப் பேச்சை முடித்தேன்.

மூன்றும் நாள்.

''டாக்டரிடம் போய் வந்தும் பயனில்லே யப்பா.... கைகளின் வலி சுமாராக இருக்கிற தென்றால், நெஞ்சை யாரோ அமுக்குவது போல் இருக்கிறது. அடிக்கடி மூச்சுத் திணறு கிறது. நீதான் இங்கே கொஞ்சம் வந்து விட்டுப் போயேன்....'' என்றான். அவன் 'குரல்' எனக்குச் சரியாகப் படவில்லை. ஏதோ ஒரு பயங்கரம் நடந்து கொண்டிருக்கிறது என்பதை என்னால் ஊகிக்க முடிந்தது. உடனே அவன் வீட்டுக்கு விரைந்தேன்.

சுமதிதான் ஹாலில் அமர்ந்திருந்தாள்.. இந்த வயதில் என்ன வளர்ச்சி? சாரதா சொன்னது போல் முகத்திலும் முதுமைத் தோற்றம்.... நெற்றியில் அப்பியிருந்த குங்குமம் எனக்குத் தேவையில்லாத ஒன் றாகத் தெரிந்தது. அவள் கையில் சாரதா கொடுத்த பொம்மை!

என்னைப் பார்த்தவுடன் முறுவலித்தாள்.

''சௌக்யமா?'' என்றேன்.

''ஏதோ இருக்கிறேன்...'' பேச்சு பெரிய வர்கள் பேசும் பேச்சாக இருந்தது.

''ஆயா போனது உனக்கு மிகவும் கஷ்ட மாக இருக்குமே?...''

''தொலைந்ததே நல்லது!'' என்றாள். நான் திடுக்கிட்டேன்.

''உனக்குத் துணை இல்லையே...''

''ஏன், என் அம்மா இல்லே?'' — இப்படிச் சொல்லிவிட்டு ஏதோ சொல்லக் கூடாத தைச் சொல்லி விட்டவள் போல் வாயில் கையை வைத்து மூடிக் கொண்டாள்.

பேசிக் கொண்டிருக்கும்போதே, அவள் கையில் இருந்த பொம்மையை நான் கவனித் தேன். அதன் கைகள் இரண்டும் பின் பக்க மாகத் திருகி வைக்கப் பட்டிருந்தன. அதன் நெஞ்சில் ஓர் ஊசி செருகப்பட்டிருந்தது.

நான் பார்ப்பதைக் கவனித்தவுடன் அவள் பொம்மையைப் பின்னால் மறைத்துக்கொண் டாள். அதற்கு மேலும் அங்கே நிற்க விரும் பாமல் அவள் தந்தையைப் பார்க்க மாடிக் குச் சென்றேன். அங்கே சங்கரன் படுக்கை யில் புரண்டபடி நெஞ்சு வலியால் துடித்துக் கொண்டிருந்தான். அதைப் பார்த்தபோது தான் நோயின் பயங்கரம் எப்படி இருந் திருக்கும் என்று என்னால் ஊகிக்க முடிந்தது. டாக்டர்கள் எல்லோரும் அவன் உடம்பில் எந்த விதமான கோளாறும் இல்லை யென்று சொல்லி விட்டார்களாம். பெண்ணைக் கொடு மைப்படுத்தியதன் பலனை இப்போது சங் கரன் அனுபவிக்கிறானா?

அவனிடம் பேசினேன்.

''அப்பா.... அவளைப் பற்றிப் பேசவே பேசாதே. அவளுக்கு ஏதோ பிசாசு பிடித் திருப்பது போலத்தான் தோன்றுகிறது.... அவள் முகத்தைப் பார்க்கவே எனக்குப் பய மாக இருக்கிறது... இரவில் என் அறையில் யாரோ நடமாடுவது போலத் தோன்றுகிறது. அத்துடன் நில்லாமல் என் உடலை யாரோ அமுக்குவது போலத் தோன்றுகிறது'' என் றான் நடுங்கும் குரலில்.

எனக்குத் திகில் அதிகமாகியது.

''நான் யாராவது ஒரு பூசாரியை வர வழைக்கிறேன்'' என்றேன்.

''தேவையில்லை. இந்த வித்தையை நானே படித்திருக்கிறேன். சுமதியின் கையில் இருக்கும் பொம்மையைப் பிடுங்கி எறிந்து விட்டால் என் உடல் உபாதை தீர்ந்து விடும்...'' என்றான்.

சாரதா சொன்னதை வைத்துப் பார்த் தால் சுமதி எதையோ கற்றுக் கொண்டிருக் கிறாள் போலத் தோன்றுகிறது.

''நிலைமை இப்படி இருக்கும்போது அவளைப் போட்டு ஏன் அடிக்கிறாய்? தாய் இறந்து விட்டால் மகள் என்ன செய்வாள்?''

''நான் மடையன். ஏதோ வெறியில் இருந்து விட்டேன். இனிமேல் நான் அவளை எங்கே அடிக்கப் போகிறேன்? அவள் தாய் அவளுக்காக இங்கே வந்திருக்கிறாள்'' என்று அவன் சொல்லிக் கொண்டிருக்கும்போதே டாக்டர் வந்து விட்டார்.

அவர்களை அங்கேயே விட்டு விட்டு, நான் மட்டும் கீழே இறங்கி வந்தேன்.

இருட்டில், வாயிலில் சுமதி நின்றுகொண் டிருந்தாள். ''இரு வருகிறேன்'' என்று யாரிடமோ அவள் பேசிக் கொண்டிருப்பது எனக்குக் கேட்டது. நான் வேகமாகப் போய் வெளியே பார்த்தேன். இருட்டு. யாரையும் காணோம்!

''சுமதி! அந்தப் பொம்மையை இங்கே கொடம்மா'' என்று கையை நீட்டினேன்.

''முடியாது'' என்று சொல்லி விட்டு, அதன் கழுத்தை இரண்டு கைகளாலும் திருகினாள். மாடியிலிருந்து சங்கரன் பயங் கரமாகக் கூச்சலிடுவது எனக்குக் கேட்டது.

சுமதி.... வெளியே, அந்த இருளில் ஓடி விட்டாள். தன் தாயைத் தேடிக் கொண்டு ஓடிவிட்டாளோ? நான் அவளைப் பிடிக்க நினைக்கவில்லை. மேலே இருந்து இறங்கி வந்த டாக்டரின் முகம் எனக்கு விஷயத் தைச் சொல்லி விட்டது. மகளுக்கு அவன் இழைத்த கொடுமை.... மனைவியை வர வழைத்து விட்டது ஆவியாக! இல்லா விடில், சங்கரன் வைத்தியத்துக்குக் கட்டுப் படாமல் இறக்க முடியுமா?

மறுநாள் லாரியில் அடிபட்ட சுமதியின் பிணத்தைப் பார்க்க என்னை அழைத்திருந் தார்கள் போலீசார்!

---

''ஏண்டா... தங்கச்சியை இப்படியா 'சப்'னு கன்னத்திலே அறைவறது?''

''இல்லம்மா... உப்புப் போட்டுத்தான் அறைஞ்சேன்... ஏனோ 'சப்'னு போயி டுச்சு...''

— மனோகரன்



# நாலு பேரிடம் நாலு நூல்கள்



* திருமதி ஜோதி அக்கா





* இரா. எ. சந்திரன்ஜெயபால்



* சந்திரகுமார்



* டாக்டர் கே. கிருஷ்ணகுமார்

**நாலுபேரிடம் நாலு நூல்களைத் தந்து விட்டு ஒரு வாரம் கழித்துச் சென்று சந்தித்த போது...**

## நந்திபுரத்து நாயகி

இரா. எ. சந்திரன் ஜெயபால், தமிழக சட்டப் பேரவை உறுப்பினர்:

சோழ நாடு, அதன் அரசியலைப் பற்றியது. குந்தவை, அவள் சகோதரன் அருள்மொழித்தேவர், அவள் காதலன், வந்தியத்தேவன் ஆகியோர் தவிர வேறு பல கதாபாத்திரங்கள் உள்ளனர். ஆசிரியர் நம்மைச் சரித்திர கால சோழ நாட்டுக்கு அழைத்துச் சென்று அதன் அரசியல் சூழ்நிலையில் சிக்க வைத்து விடுகிருர். அருமை. குந்தவை, வந்தியத்தேவன் காதல் அழகாகப் புனையப்பட்டுள்ளது. புத்தகத்தில் அதிக சஸ்பென்ஸ் உள்ளது. ஒரு மர்ம நாவலைப் படிப்பது போன்ற உணர்ச்சிகூட ஏற்படுகிறது. ஆசிரியரின் அழகுத் தமிழ்நடை, வார்த்தைகளின் கோவை, சொல்நயம் எல்லாம் பாராட்டுக்குரியவை. வந்தியத்தேவன் குந்தவை எனக்குப் பிடித்த கதாபாத்திரங்கள்.

கதாபாத்திரங்கள் மிகவும் அதிகம். எனவே பெயர்களை ஞாபகம் வைத்துப் படிப்பது மிகவும் கஷ்டமாக உள்ளது. இவ்வளவு பெரிய புத்தகத்தில் அட்டைப் படத்தைத் தவிர உள்ளே வேறு படங்கள் இல்லாததால் சற்று சப்பென்று உள்ளது. கதையைச் சற்றே சுருக்கி யிருக்கலாம். பல இடங்களில் வளவள வென்று நீட்டியுள்ளார். அன்றைய சோழ நாட்டு அரசியல், இன்றைய இந்திய அரசியல் போல் குழப்பமாக உள்ளது. மொத்தத்தில் பொன்னியின் செல்வனைத் தொடர்ந்து எழுதப்பட்ட இந்தப் புத்தகம் நன்ருகவே இருக்கிறது. விலை ரொம்ப அதிகம்தான். விலையைப் பார்த்தால் நடுத்தர வர்க்கத்தினருக்குப் புத்தகம் படிக்கும் ஆசையே போய்விடும். எனக்கு ரொம்பப் பிடித்த இனிமையான புத்தகம்.

நந்திபுரத்து நாயகி (இரண்டு பாகங்கள்) ஆசிரியர்: விக்கிரமன், வெளியீடு: நல்வாழ்வு பதிப்பகம், 22, எர்ரபாலு செட்டித் தெரு, சென்னை-1, விலை ரூ. 37-50

## எது வாழும் வழி?

ஆதம்பாக்கத்தில் வசிக்கும் டாக்டர் கிருஷ்ண குமார்:

யோகாசனம் செய்வதால் உடலும் உள்ளமும் தூய்மை அடைகிறது என்று ஆசிரியர் கூறியுள்ளதை ஒப்புக் கொள்கிறேன்.

இதைத் தவிர புதுமையாக இதில் எதுவும் இல்லை. ஆங்கில மருத்துவர்கள், நோயாளிக்குச் சொல்லும் 'குடிக்காதே, புகை பிடிக்காதே' என்பதை எல்லா வியாதிகளுக்கும் இவரும் கூறியுள்ளார். சைவம் சாப்பிட வேண்டும். அசைவம் சாப்பிடுவதால் வியாதிகள் தீராது என்று ஆசிரியர் கூறுவதை ஒப்புக் கொள்ள முடியாது.

ஆஸ்துமா வியாதிக்கு ஸ்ட்ரெப்டோமைசின் ஊசி போட்டால் குணமாக்கி விடலாம் என்று ஆசிரியர் கூறுவது தவறு. அதைக் காச நோய்க்குத்தான் முக்கியமாக உபயோகிக்கிருர்கள்.

பலவகை வியாதிகளுக்கு ஆசிரியர் உணவுத் திட்டம் கூறினுலும், அதில் நிவாரணம்

ஏற்படுமா என்று கூறவில்லை. மேலும் ஒருவருக்குத் தீவிர வியாதி வந்தால் அப்போது யோகாசன முறைகள் மூலம் உடனடி நிவாரணம் கிடைக்குமா? புத்தகத்தில் பதில் இல்லை.

காலரா, விஷபேதி, சுரம், சர்மநோய்கள் முதலியவைகளுக்குச் சுத்தமான ஒரு கிராம் தேனுடன் இரண்டு சிட்டிகை மஞ்சள் பொடி குழைத்துக் கொடுத்தால் நோய் பறந்து விடுமாம். இதை ஒப்புக் கொள்ள முடியாது. எங்கள் ஆங்கில வைத்திய முறைப்படியே இதையெல்லாம் தீர்ப்பது கஷ்டம். ஆஸ்பத்திரியில் சேர்க்க வேண்டும். இவற்றை எப்படி யோகாசனத்தால் குணமாக்க முடியும்? ஆசிரியர் கரடி விடுகிறாரா?

தாய் கோபம் கொண்டால் அவள் இரத்தத்தில் நிற மாறுதல் உண்டாகிறது என்றெல்லாம் ஆசிரியர் கூறுவதை ஒப்புக் கொள்ள முடியாது.

இவர் கூறும் ஆசனங்கள் செய்தால் ஆரோக்கியம் பாதுகாக்கப் படுவதுடன் வளரவும் செய்யும். ஆனால் பெரிய பெரிய வியாதிகளைப் போக்க முடியுமா? கடவுளுக்குத்தான் வெளிச்சம்!

எது வாழும் வழி? ஆசிரியர்: யோகி என் ராஜன். வெளியீடு: வானதி பதிப்பகம் தியாகராய நகர், சென்னை—17. விலை ரூ. 7

## போதையின் பாதையில்...

ஆழ்வார்பேட்டையில் வசிக்கும் குடும்பத் தலைவி திருமதி ஜோதி அச்சுத்:

இந்தப் புத்தகத்தை நீங்கள் கொடுத்த போது எனக்கு சிறிது பயமாகத்தானிருந்தது. காரணம் இந்த மாதிரி புத்தகங்கள் நான் இதுவரை படித்ததில்லை. வீட்டு வேலைகள் நடுவேயும், இரவிலும் படித்தேன். எனக்குத் தெரியாத பல விஷயங்கள் தெரிந்து கொண்டேன்.

தாம்பூலம் பகுதியில் அதைப் போடும் விதம், அது எப்போதிலிருந்து பழக்கத்துக்கு வந்தது, இப்பழக்கம் வளர்ந்துள்ள



ஊர்கள் ஆகியவற்றுடன் வெற்றிலை விவசாயம் செய்யும் முறை போன்றவைகளையும் கூறுகிறார்.

அபினி, கஞ்சா அத்தியாயம் ரொம்பத் திரில்லிங்காக இருந்தது. இந்தியா, மற்றும் வெளிநாடுகளிலும் மக்கள் இதை உபயோகித்த விதம், இதை உற்பத்தி செய்யும் விதம், அப்பப்பா எவ்வளவு விஷயங்கள்?

புகையிலை, காப்பி, டீ பகுதியில் அவை உற்பத்தியாகும் முறை, பழக்கம் வந்த விதம், இந்தியா மற்றும் வெளிநாடுகளில், காப்பி, டீ தயாரிக்கும் முறைகளை விளக்கியுள்ளார்.

புத்தகத்தில் சில இடங்களில் வளவளவென்று நீண்ட வாக்கியங்கள் உள்ளன. தவிர்த்திருக்கலாம். நூலில் உள்ள விஷயங்களை சித்திரித்திருக்கிறது அட்டை ஓவியம் என்றாலும், மாடர்ன் ஆர்ட் என்ற பெயரில் இது ஒரு திருஷ்டி பரிகாரம். விலை ரூ. 20 அம்மாடியோவ்!

''போதையின் பாதையில்'' பி. ஜி. எல். ஸ்வாமி; வெளியீடு, வாசகர் வட்டம் 23, தணிகாசலம் செட்டி ரோடு, சென்னை-17. விலை ரூ. 20.

## தமிழில் சமூக நாவல்கள்

ராமகிருஷ்ண மெயின் உயர்நிலைப்பள்ளியின் உடற்பயிற்சி இயக்குநர் திரு உத்திரகுமார்:

பொதுவாக கிரிக்கெட், ஹாக்கி போன்ற விளையாட்டு சம்பந்தப்பட்ட புத்தகங்களைப் படிக்கும் எனக்கு இப் புத்தகம் ஒரு புது அனுபவம்.

இந்தப் புத்தகத்தில் தமிழ் நாவல்களின் வளர்ச்சியைப் பற்றியும், எழுத்தாளர்களைப் பற்றியும் மூன்று பகுதிகளாக அதாவது 1900 முதல் 1921, வரை, 1922முதல் 1947வரை சுதந்திரத்துக்குப்பின் என்று பிரித்துக் கூறியுள்ளார். பிரபல எழுத்தாளர்களின் நாவல் சுருக்கங்களையும் கொண்ட புத்தகம் இது.

முதல் பகுதியில், பணக்கார வர்க்கம் ஏழைகளுக்குச் செய்த கொடுமைகளையும், பெண்ணின் பெருமைகளையும் சித்திரிக்கும் கதைகளைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது.

இரண்டாம் பகுதியில், பணம் படைத்த வயோதிகர்கள் ஏழை இளம் பெண்களைமணம் செய்து கொள்ளுவது போன்ற கொடுமைகளைச் சித்திரிக்கும் கதைகள் பற்றிக் கூறியுள்ளார் ஆசிரியர்.

மூன்றாவது பகுதியில், சுதந்திரத்துக்குப் பின் ஏற்பட்ட சமூக மாறுதல்களை விவரிக்கும் கதைகள் பற்றிச் சொல்கிறார். மாணவர் பிரச்னை பற்றிய கதைகளும் செக்ஸ் கதைகளும் கூட ஆராயப்பட்டுள்ளன. புத்தகத்தைப் படிக்கும் போது தமிழ் நாவலாசிரியர் பலரின் கருத்தோவியங்களை ஒருசேரக் காண முடிகிறது. வளரும் தமிழ் எழுத்தாளர்களுக்கு இந்நூல் பெரிதும் பயன்படும்.

தமிழில் சமூக நாவல்கள், ஆசிரியர்: தா. வே. வீராசாமி, வெளியீடு: தமிழ் புத்தகாலயம், 576, பைகிராப்ட்ஸ் ரோடு, சென்னை.5 விலை ரூ. 6.

பேட்டி: ''சிக்கி''



# நல்ல முடிவு

ஆர்.கே. பொன்னம்மாள்

"என்னெய் கத்தரிக்காய்'' வாணலியில் வதங்கிக் கொண்டிருந்தது. ரசத்துக்ுத் தாளித்து விட்டால் சமையல்முடிந்து விடும். மணி எட்டு அடிப்பதற்குள் தட்டை வைத்துக் கொண்டு உட்கார்ந்து விடுகிறாள் மாலதி. அப்படி என்ன தலைபோகிற அவசரமோ? எல்லாப் பெண்களும் தான் ஆபீசுக்குப் போகிறார்கள். இப்படியா ஆபீஸ், ஆபீஸ் என்று பறக்கிறார்கள்?

''அம்மா, மணி எட்டேகால் ஆகிவிட்டது. சாதம் போடேஎம்மா, எனக்கு இந்தக் கறியெல்லாம் இல்லாவிட்டாலும் பரவாயில்லை. மோர் சாதம் போதும்!'' மாலதியின் குரல் அலமேலுவுக்கு மேலும் கோபத்தைக்கிளப்பியது. எதிர்வீட்டு மாடியில் குடியிருக்கும் பிள்ளை ரமேஷ் வாசலில் ஸ்கூட்டரை நிறுத்திக் கொண்டு ஸ்டார்ட் செய்யப்பாடு பட்டுக் கொண்டிருந்தான். அவன் பார்வை அடிக்கடி தன் வீட்டுப் பக்கம் திரும்புவதை அலமேலு கவனித்து விட்டாள். அதற்குத் தான் மாலதி இப்படிப் பறக்கிறாள் என்று தெரிந்தது அலமேலுவுக்கு.

கொஞ்ச நாட்களாகவே மாலதியைக் கவனித்துக் கொண்டுதான் இருக்கிறாள் அலமேலு. ஆபீசிலிருந்து லேட்டாக வருவது. கேட்டால் ஏதாவது காரணம் சொல்லுவது. வாசலிலே நிற்பது, எதிர்வீட்டுப் பிள்ளையும் வாசல்லே தவம் கிடக்கிறான். மாடி அறையில் விளக்கைப் போடுவதும், அணைப்பதுமாக ஏதேதோ செய்கைகள். இதையெல்லாம் பார்க்கக் கவலையாகவும், கோபமாகவும் வந்தது அலமேலுவுக்கு. எதிர்வீட்டுப் பிள்ளையின் தலை கிராப்பும், கிருதாவும், முகம் நிறைய மீசையும் கலர் சட்டையும் பெண்களைப் போல் கழுத்து வரையில் தலைமயிரும் பார்க்கவே பிடிக்கவில்லை அலமேலுவுக்கு.

தன் தங்கை பிள்ளை ராகவனுக்கு மாலதியைக் கல்யாணம் செய்து கொடுக்க வேண்டுமென்று மாலதியின் அப்பா கோட்டை

கட்டிக் கொண்டிருக்கிறார். தங்கை பிள்ளைக்கு ''பேங்கில்'' நல்ல வேலை. யோக்கியமான பிள்ளை. தம் வார்த்தைக்குக் கட்டுப்பட்டவன் என்றெல்லாம் எண்ணிக் கொண்டிருக்கிறார். இந்தப் பெண் அவர் எண்ணத்தில் மண்ணைத்தான் போடப் போகிறது. இப்படியெல்லாம் நினைத்தாள் அலமேலு.

''அம்மா, ஆபீஸ் போகிறேன். வர கொஞ்சம் நேரமானாலும் கவலைப்படாதே!'' மாலதி செருப்பை மாட்டிக் கொண்டு படி இறங்கி விட்டாள். அவள் நினைவெல்லாம் ரமேஷ்!

ரமேஷ் ரகம் அழகே தனி. ஏதோ கம்பெனியில் 800 ரூபாய் சம்பளம் என்றாலும் பணத்தைச் சேர்த்து வைக்கும் எண்ணமில்லாமல் தாராளமாக செலவு பண்ணுகிறான். பத்து ரூபாய் நோட்டாகத்தான் வாரி இறைக்கிறான். அவன் உடையும், பேச்சும், சிரிப்பும் எல்லாமே அழகு: மாலையில் பீச்சு — இல்லை பகல் ஆபீசில் லீவு போட்டுவிட்டு சினிமா — எத்தனை இன்பம்: நாளை ஞாயிற்றுக்கிழமை



''ஏன், பந்து கோல் போகாம தடுத்தே. நீ ஸ்டெனோவைக் காதலிக்கிற விஷயத்தை உன் மனைவி கிட்ட சொல்லிடுவேன் ஆமா!''

மகாபலிபுரம் போகலாமா? என்று கேட்டிருக்கிறான். எப்படிப் போவது?

அம்மாவுக்கு எதிர்வீட்டு ரமேஷைப் பற்றி நல்ல அபிப்பிராயமே இல்லை ''போதும் அவன் தலையும் உடையும், அசடு வழியப் பேசறதும்'' என்பாள். பெண்களிடத்தில் தமாஷாகப் பார்த்துப் பேசினால் அதுக்கு அசடு வழிகிறது. என்று அர்த்தமா? அம்மாவுக்கு அத்தைப் பிள்ளை அந்த உம்மணா மூஞ்சி ராகவனைத்தான் பிடிக்கும். 'அவன் அடக்கமானவன் புத்திசாலி. எதற்கெடுத்தாலும் இரண்டே வார்த்தையில் பதில்! போதுமே ராகவன் பெருமை....

மாலதி எண்ணச் சுழலில் லயித்திருந்தபடியால் ரமேஷ் பக்கத்தில் வந்து ஸ்கூட்டரை நிறுத்தினதைக்கூட கவனிக்கவில்லை. ''ஹலோ என்ன யோசனை. ஏறு வண்டியில் — வீட்டிலே அம்மா கசப்பாகப் பேசி விட்டாளோ? முகத்திலே சுரத்தே இல்லையே?'' என்றான்.

நாலாபக்கமும் பார்த்துவிட்டு ஸ்கூட்டர் பின்னால் ஏறிக் கொண்டாள் மாலதி. இளம் காற்றில் ரமேஷின் முன்நெற்றி மயிர்கள் பறந்து கொண்டிருந்தது அவன் முகத்துக்கு வெகு அழகாயிருந்தது.

பத்தே நிமிஷங்களில் ஆபீஸ் வாசலுக்கு வந்து விட்டாள் மாலதி. பஸ்ஸில் வந்திருந்தால் அரை மணி நேரமாகியிருக்கும். ''நான் வரேன் மாலு'' ரமேஷ் ஸ்கூட்டரைக் கிளப்பினான். அவன் முதுகும் பின்னழகும் மாலதிக்கு மிகவும் பிடித்திருந்தது.

மாலையில் பீச்சில் ரமேஷுடன் பேசி ஒரு முடிவுக்கு வந்த பின் ஏழு மணிக்குத்தான் வீட்டுக்கு வந்தாள். வழக்கம் போல் அம்மாவைப் பார்த்துப் பயப்படவில்லை. ஏனென்றால் ஒரு முடிவுக்கு வந்து விட்டிருந்தாள். மாலதி அம்மாவிடம் விஷயத்தைத் திறந்து சொல்லி விட வேண்டியது. அம்மாவும் அப்பாவும் என்ன சொன்னாலும் சரி. இவர்களுக்காக அந்த உம்மணா மூஞ்சி, சிக்கன ஸ்பெஷலிஸ்ட் ராகவனை மணந்து கொள்ள முடியாது. ரமேஷ்தான் தனக்குக் கணவனாக வரவேண்டும் என்று நிச்சயித்து விட்டாள்.

வழக்கத்துக்கு விரோதமாக அம்மாவும் ஏதுவும் பேசவில்லை. தட்டில் உப்புமாவையும் காப்பியையும் டக்கென்று மேஜை மேல் வைத்தாள். விஷயத்தை எப்படி ஆரம்பிப்பது என்று மாலதிக்குத் தெரியவில்லை. நல்ல காலம் அம்மாவே பேசி விட்டாள். 'உங்க அத்தையிடமிருந்து கடிதாசு வந்திருக்கிறது' என்பதற்குள் மாலதி இடைமறித்து ''அத்தான் சமாசாரம் தான் எழுதியிருப்பாள். அம்மா நான் அத்தானைக் கல்யாணம் செய்து கொள்ள மாட்டேன். ரமேஷைத்தான் கல்யாணம் செய்து கொள்ளுவேன். உனக்குப் பிடித்ததோ இல்லையோ— வாழப் போகிறவள் நான். இதை அப்பாவிடமும் சொல்லிவிடு'' என்றாள் அழுத்தமாக.

''இத்தனையும் பேசறியே. நீயே இதையும் உங்கப்பாகிட்டே சொல்லேன். இதுக்குமட்டும் அம்மா வேணுமாக்கும்!'' அம்மா தனக்குள் சொல்லிக் கொண்டாள்.

வாசலில் செருப்புச் சத்தம். அப்பா வந்து விட்டார். என்ன இருந்தாலும் மாலதிக்கு மனத்துக்குள் பயம்தான். அப்பாவின் கோபம் அப்படிப்பட்டது.

அப்பா காப்பி சாப்பிட்டதும் துண்டை உதறிப் போட்டுக் கொண்டு வாசலுக்குப் போய் விட்டார். விஷயத்தை அம்மா சொல்லச் சமயம் இடைக்கவில்லையே என்று மாலதிக்குக் கவலை. எதிர்வீட்டு மாமாவும் வந்து விட்டார் பேச. அரசியல், விலைவாசி என்று பேச்சு வளர்ந்து கல்யாணப் பேச்சில் வந்தது. வரதட்சணையைப் பற்றி எதிர் வீட்டு மாமா காரசாரமாகப் பேசிக் கொண்டிருந்தார். மாலதி எதிர்வீட்டு ஜன்னலில் ரமேஷ் நிற்பதைக் கவனித்தாள். கையில் பத்திரிகையை வைத்துக் கொண்டே கீழே நடக்கும் பேச்சைத்தான் அவனும் கேட்டுக் கொண்டிருந்தான். அப்பா சத்தமாகப் பேசினார். ''எனக்கு இருப்பது ஒரே பெண். நன்றாகப் படிக்க வைத்து விட்டேன். அவள் யாரைக் காதலித்து 'அப்பா, நான் இவரைக் காதலிக்கிறேன்' என்று சொன்னால் அவன்

இஷ்டப்படியே — அவன் எந்த ஜாதி — என்ன வேலே செய்கிறுன் என்றெல்லாம் கேட்காமல் அவனுக்கே கல்யாணம் செய்து கொடுத்து விடுவேன்'' என்ருர்.

''என்ன சார் இது. ஒரு பொறுப்புள்ள தகப்பன் பேசும் பேச்சா? குழந்தைகளுக்கு நல்லது கெட்டது என்ன தெரியும்? அவர்கள் இஷ்டப்படியே விடுவது சரியென்று எனக்குத் தோணவில்லே''— இது எதிர்வீட்டுக்காரர். மாலதிக்கு அப்பாவின் பேச்சு காதில் தேனுக இனித்தது. இத்தனே சீக்கிரம் இந்தப் பிரச்னேக்கு — தீர்வு கிடைத்து விடும் என்று அவள் நினேக்கவே இல்லே. எதிர்வீட்டில் ரமேஷ் பத்திரிகையைப் படித்துக் கொண்டு ஜன்னலே மூடிவிட்டுப் போய் விட்டான். அவனுக்கும் எத்தனே மகிழ்ச்சி இருக்கும். நாளேக்கே ரமேஷை அப்பாவிடம் வந்து பேசச்சொல்ல வேண்டும் என்று நினேத்துக் கொண்டாள் மாலதி.

இரவு சாப்பிடும் போது அம்மா பேச்சை எடுத்தாள். ''இப்போ எதிர்வீட்டுக்காரர் கிட்டே அளந்துண்டு இருந்தேளே! அதுக் கிசைந்தபடி ஒங்க பொண் அந்த மாடியிலே இருக்கிற பிள்ளேயைக் காதலிக்கிருளாம். கல் யாணம் பண்ணி வையுங்களேன் பார்க்க லாம்'' என்ருள்.

''எல்லாம் எனக்குத் தெரியும். நானும் எல்லாத்தையும் கவனிச்சுண்டுதான் இருக் கேன். எனக்கென்னமோ மாலதியை ராகவ னுக்குத் தரணும்னு இருந்தது. மாலதிக்குப் பிடிச்ச பிள்ளேக்கே அவளேக் கல்யாணம் பண்ணி வச்சுடறேன. அம்மா, மாலதி நாளேக்கே அந்தப் பிள்ளேயை எங்கிட்டே வந்து பேசச் சொல்லு; சீக்கிரமே அவன் குடும்பத்தாருடன் பேசிக் கல்யாணத்தை முடிச்சுடுவோம்'' என்ருர் அப்பா.

மாலதிக்கு இரவெல்லாம் தூக்கம் பிடிக்க வில்லே. ஒரே மகிழ்ச்சி. கனவெல்லாம் ரமேஷுடன் வாழும் வாழ்க்கையைப் பற்றி.

ஸ்கூட்டரில் ரமேஷுடன் சென்றபொழுது, ''நாளே ஞாயிற்றுக்கிழமை காலே வீட்டுக்கு வாருங்கள். அப்பாவும் இருப்பார். கல்யா ணப் பேச்சைப் பேசி விடலாம்'' என்ருள் மாலதி மகிழ்ச்சியுடன்.

ஞாயிற்றுக்கிழமை பொழுது விடிந்ததுமே மாலதிக்கு ஒரே குஷி. காலேயில் சமையற் கட்டில் அம்மாவுக்கு உதவ வந்தாள். ''எப் படியிருந்தாலும் வந்த பிள்ளேயைச் சாப்பிடச் சொல்ல வேண்டாமா? நமக்குப் பிடிக்காவிட டாலும் மாலதிக்குப் பிடிச்சவனுச்சே. ஏதா வது காய்கறி வாங்கி வாருங்கள்'' என்ருள் அம்மா அப்பாவிடம்.

மாலதி எதிர்வீட்டு ஜன்னலேப் பார்த்தாள். ஜன்னல் சாத்தியிருந்தது. ஞாயிற்றுக்கிழமை காலேயில் ''ரமேஷ் எங்கே போயிருப்பான்?'' என்ற எண்ணம் எழுந்தது.

மணி பதினென்ருகி விட்டது. சமையலே முடித்து விட்டு வாசலுக்கும் சமையற்கட் டுக்குமாக நடை போட்டாள் அம்மா. மாலதி யும்ஒரு மணி நேரம் கண்ணுடிக்குமுன் நின்று அலங்காரம் செய்து கொண்டது வீணுகிறதே

# கல்கி - ஜாய்டாய் குழந்தைகளுக்கான போட்டி பரிசு பெற்றவர்கள்




முதல் பரிசு
ஓவியம் : எஸ். காமாட்சி
கதை : எஸ். கல்யாணி




இரண்டாம் பரிசு
ஓவியம்: என். ஜெய்
கட்டுரை : என். ஆனந்தி




மூன்ரும் பரிசு
ஓவியம் : ஆர். லக்ஷ்மி
கதை : ஆர். கண்ணன்




என்ற கவலையில் ஒன்றும் ஓடாமல் உட்கார்ந்திருந்தாள். மணி பன்னிரண்டு அடித்தது. மேலும் அம்மாவால் பொறுக்க முடியவில்லை. ''ஏண்டி மாலதி. அந்தப் பிள்ளையைக் காணோமே. நான் போய் விசாரிக்கிறேன் எதிர் வீட்டில்'' என்றாள். மாலதி அழுது விடுவாள் போலிருந்தது. ரமேஷ் எங்கே போயிருப்பான்? சரியாக எட்டு மணிக்கே வருகிறேன் என்று சொன்னானே. ஒருவேளை கல்யாணம் பேச என்று வரும்போது தனியாக வர வேண்டாம், யாராவது நண்பனை அழைத்து வரலாம் என்று போயிருப்பானோ? அப்படி ஓர் எண்ணம்.

வாசலில் அம்மாவின் பேச்சுக் குரலும், எதிர்வீட்டு மாமாவின் குரலும் கேட்டன. ''இந்தக் காலத்துப் பிள்ளைகளைப் பற்றி என்னத்தைச் சொல்லுகிறது? திடீர்னு நேத்து ராத்திரி அறையைக் காலி பண்ணிண்டு போய் விட்டான் அந்தப் பிள்ளை. இரண்டு மாச வாடகை முன்பணம் நிக்கிறது என்றேன். பரவாயில்லை என்று பெட்டி படுக்கைகளுடன் இரவோடு இரவாகப் போய் விட்டான். எந்த ஊருக்குப் போகிறேன் என்றும் சொல்லவில்லை. நான் இரண்டு முறை கேட்டேன். பதிலே சொல்லவில்லை. ஊரிலே யாருக்காவது உடம்பு சரியில்லையோ என்று கூட சந்தேகப்பட்டுக் கேட்டேன். 'அதெல்லாம் ஒன்றுமில்லை' என்று கிளம்பி விட்டான். அவன் எந்த ஆபிசிலே வேலை செய்யறான் என்று கூடச் சரியா சொல்லல்லே. அடிக்கடி ஆபீஸ் மாறிக் கொண்டேயிருந்தான். அப்படி ஒரே நாளில் வீட்டைக் காலி செய்து கொண்டு போகும்படியாக என்ன அவசரமோ?'' மாமா பொருமினார்.

மாலதிக்கு இந்தப் பேச்சு அதிர்ச்சியாக இருந்தது. ரமேஷ் தன்னிடம் கூடச் சொல்லிக் கொள்ளாமல் போய் விட்டானே, இவனை நம்பி....? யோசித்தாள்.

அம்மா முகத்தில் ஈயாடவில்லை. மிகவும் சோர்ந்து விட்டாள். மாலதியைப் பார்க்கவே சங்கடமாக இருந்தது அவளுக்கு.

எங்கோ வெளியில் போயிருந்த அப்பா தடதடவென்று உள்ளே வந்தார். ''பசி பிராணன் போகிறது. இலையைப் போடு'' என்றார் கைகால் கழுவிக் கொண்டே.

''அந்தப் பிள்ளையைக் காணோமே'' என்றாள் அம்மா தயக்கத்துடன். மாலதி விசும்பி அழும் குரல் கேட்டது.

''அந்தப்பிள்ளை ஒண்ணும் வர மாட்டான். காதலிக்க எத்தனையோ பிள்ளைகள் வருவார்கள். ஆனால் கல்யாணம் என்றதும் இந்தக் காலத்துப் பிள்ளைகள் பயந்து விடுகிறார்கள். பொறுப்பை ஏற்றுக் கொள்ள அத்தனை பயம். இன்று இரவு வண்டியிலே ராகவன் வருகிறான். இன்று நல்ல நாள். பேச வேண்டியதைப் பேசி விடுவோம். எங்கே மாலதி சாப்பிட வா'' என்ற அப்பாவின் குரலுக்கு மறு பேச்சுப் பேசத் தோன்றாமல் மாலதி தன் மனத்திலுள்ள ரமேஷைப் பற்றிய சிந்தனைகளைக் கழுவிக் கொண்டு குனிந்த தலையுடன் ஒரு நல்ல முடிவுடன் இலையின் முன் உட்கார்ந்தாள்.

## விட்ட குறை!

வெளியே சென்றவர்கள் பசியோடு வந்தனர். 'தளிகை ஆச்சா இலையைப் போடு, பசி ஆளைக் கொல்லுகிறது' என்று கூறியபடியே நுழைந்தார் என் கணவர். நானும் 'தளிகை எப்போதோ ரெடி... நீங்கள் தான் லேட் என்று கூறியபடி இலையைப் போட்டேன். வந்திருந்த விருந்தினர்களில் ஒருவர், 'எல்லா அயிட்டங்களையும் இப்படி வைச்சுட்டு நீங்களும் சாப்பிட உட்காருங்க' என்று கூறவும் எல்லா அயிட்டங்களையும் நடுவில் வைத்துவிட்டு, சுற்றிலும் நாங்கள் அனைவரும் அமர்ந்து கொண்டோம். திடீரென என் கணவர் ''ஆமாம் எல்லாம் கொண்டு வந்து வைச்சே... முக்கியமானது எங்கே?'' என்று கேட்க,

''என்னது... முக்கியமானது'' என்று நான் முழிக்க,

''சாதத்தைக் காணோமே... அதைக் கொண்டு வா...'' என்றதும் தூக்கி வாரிப் போட்டது. 'கடைசியில்' ரைஸ் குக்கரில் சாதத்தை வைத்துக் கொள்ளலாமென நினைத்திருந்த நான் அதை மறந்து சாதத்தைத் தவிர மற்ற எல்லா வற்றையும் செய்திருந்த பரிதாபத்தை என்ன சொல்ல! அசடு வழிந்தேன். விருந்தினர்களில் ஒருவர் என் நிலைக்கு இரங்கி 'அதனாலென்ன 'குக்கரில்' வைத்தால் 15 நிமிஷத்திலே ஆயிடறது... அதுக்குள்ளே இந்த ஸ்வீட், காரத்தை ஒரு கை பார்ப்போம்!' என்று சகஜமாகக் கூறினார். என் கணவர் அதனை மறுத்து எதிரில் இருக்கும் ஹோட்டலுக்குச் சென்று சாதம் மட்டும் வாங்கி வந்து நிலைமையைச் சமாளித்தார்.



— பிரேமா சம்பத்குமார்

# சிறு விவசாயிகளுக்கு பெரிய உதவி

சிறு விவசாயிகள் அபிவிருத்திக் கழகங்கள் (SFDA) ஆந்திரப் பிரதேசத்தில் ஐந்தாறு வருஷங்களாக இயங்கி வருவது நன்கு தெரியும். இந்த விவசாயிகள் அபிவிருத்திக் கழகத்தின் சேவையினல் கிட்டத்தட்ட மூன்று லட்சம் சிறு, நடுத்தர விவசாயிகள் பயன் அடைந்திருக்கிருர்கள். அதிலிருந்து 31 கோடி ரூபாய் கடன் தொகை பெற்றிருக்கிருர்கள்.

பெருமளவில் இந்தக் கழகங்கள் சிறு, நடுத்தர விவசாயிகள் துரித கதியில் அபிவிருத்தி அடைவதற்கு ஒரு கேந்திரமாக, மக்கள் தொகையில் மிகுந்த ஏழைமைப் பகுதியினரை மேம்படுத்துவதற்கு ஒரு கருவியாக இயங்கி வருவது கண்கூடு.

ஆந்திரப் பிரதேசத்தில் இணைந்த கிராமப்புற அபிவிருத்தித் திட்டம் 174 வட்டாரங்களுக்கு உதவுவதுடன், அங்குள்ள குறிப்பிடத்தக்க குடும்பங்கள் பொருளாதாரத் துறையில் தன்நிறைவு எய்துவதற்கும் பணி புரிகின்றன.

சிறு விவசாயிகளுக்கு நாட்டின் விவசாயப் பொருளாதார அபிவிருத்தியில் பெரும் பங்கு உண்டு.

# பெண் எழுத்தாளர்கள் சங்கம்



கி.ராஜேந்திரன்

**''பெ**ண் எழுத்தாளர்கள் சங்கம்'' என்பதாக ஒரு தனி அமைப்பு இருப்பது இன்றியமையாதது என்று உணர்ந்து திருமதி ராஜம் கிருஷ்ணன் அமைப்பாளராக விளங்கிப் பெண் எழுத்தாளர்களுக்கு அழைப்பு விடுத்திருக்கிறார்.

ரொம்ப சந்தோஷம். ''பெண் எழுத்தாளர்கள் சங்கம்'' ஜாம் ஜாம் என்று நடந்து, முன்னேறி வளர்ந்து, மகாநாடுகள் கூட நடத்த வேண்டும் என்று வாழ்த்துகிறேன். அதே சமயம் சில யோசனைகளையும் கூற விரும்புகிறேன். ஆண் எழுத்தாளர்கள் பலர் இன்று பெண்களின் பெயர்களை வைத்துக் கொண்டு எழுதுகிறார்கள். பெண் எழுத்தாளர் சங்கத்தில் பெண் பெயரைச் சூடிக் கொண்டு எழுதும் ஆண் எழுத்தாளர்கள் சேர்த்துக் கொள்ளப் படுவார்களா என்பது தெரியவில்லை. எந்த விதமாகப் பார்த்தாலும் இதில் சிக்கல் இருக்கிறது. ''சேர்த்துக் கொள்கிறோம்'' என்றால் இந்த ஆண் எழுத்தாளர்களுக்குக் கோபம் வரும். ''நாங்கள் என்ன பெண்களா? பெண் எழுத்தாளர் சங்கத்தில் சேருமாறு அழைப்பு விடுத்து எங்களை அவமானப் படுத்துகிறீர்களே!'' என்று ரோசத்துடன் வினவுவார்கள். ''சேர்த்துக் கொள்ள மாட்டோம்'' என்றாலும் இவர்கள் கோபித்துக் கொள்வார்கள். ''நாங்கள் என்ன பாபம் செய்தோம்? எங்களை ஏன் ஒதுக்க வேண்டும்? இது என்ன, தென்னாப்பிரிக்க இன வெறிக் கொள்கையை விட மோசமாக அல்லவா இருக்கிறது?'' என்று பாய்வார்கள். பெண் பெயரில் எழுதும் பெரும்பாலான ஆண் எழுத்தாளர்கள் தங்கள் மனைவி பெயரில் தான் எழுதுகிறார்கள் என்பதால் இப்படி அவர்கள் கேட்பதற்குரிய வாய்ப்பு நிறையவே இருக்கிறது.

''பெண் பெயரில் எழுதும் ஆண் எழுத்தாளர்களைச் சேர்த்துக் கொள்ள மாட்டோம்'' என்று பெண் எழுத்தாளர் சங்கம் பிடிவாதம் பிடித்தால், ''பெண் பெயரில் எழுதும் ஆண் எழுத்தாளர் சங்கம்'' என்று தனியே ஒரு போட்டிச் சங்கம் ஆரம்பமாகலாம் என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

இதே போல் ''ஆண் பெயரில் எழுதும் பெண் எழுத்தாளர் சங்கம்'' ஒன்றும் தோன்றலாம்தான். இப்படி ரொம்பப் பேர் இருக்க மாட்டார்கள் என்று நாமாகவே முடிவு கட்ட வேண்டியதில்லை. எந்தப் புற்றில் எந்தப் பாம்பு இருக்குமோ, யார் கண்டது? ஆண் பெயரில் எழுதும் பெண் எழுத்தாளர்கள் இல்லாது போனாலும் ஆண்மையுள்ள பெண் எழுத்தாளர்கள் பலர் இருக்கிறார்கள். அவர்கள் ஒன்றுகூடி ஏன் சங்கம் அமைக்கக் கூடாது?

இதைத் தவிர வேறு சில போட்டிச் சங்கங்களும் உருவாக வாய்ப்பு இருக்கிறது. அண்மையில் நடந்த அனைத்திந்தியத் தமிழ் எழுத்தாளர் சங்க மகாநாட்டில் பேசிய எல்லா எழுத்தாளர்களும் ஆபாச இலக்கியத்தை வெறுத்துப் பேசியதுதான் இப்போது ''பெண் எழுத்தாளர் சங்கம்'' என்ற



# கிரிக்கெட் கற்கலாம்! 43

கேள்வி: கே. சந்திரசேகர்

படம்: ராஜ்  தயாரிப்பு: குண்டுமணி

'எல்.பி.டபிள்யூ' 'முடிவு' கேட்கச் சரியான தருணங்கள்:

பந்து காலில் படாவிட்டால் விக்கெட்டைத் தாக்கியிருக்குமா?



ஒரு விக்கெட்டிலிருந்து மற்றொரு விக்கெட் இடையிலுள்ள பிரதேசத்தில் (படத்தில் உள்ள படி) பந்து, பிட்ச் ஆனதா? அல்லது பந்து 'புல்டாஸ்' ஆக வீசப்பட்டதா?

பந்து விக்கெட்டின் 'ஆப்சைடில்' பிட்ச் ஆனதா?



கையைத்தவிர (அதாவது 'பாட்' ஏந்திய கை) மற்ற அவயவங்களில் பட்டபின் படக்கூடிய பந்து முதலில் பட்டு விட்டதா?

பாட்ஸ்மன் பந்தைத் தாக்கும் இடம் ஒரு விக்கெட்டிலிருந்து மற்றொரு விக்கெட் அமைந்த பரப்பளவுக்குள் இருந்ததா? (அதாவது பந்து உடம்பைத் தாக்கும் போது)




இந்தக் கேள்விகளுக்கெல்லாம் 'ஆம்' என்று பதில் வந்தால் தான் எல்.பி.டபிள்யூ ஆகலாம்!

39 வது சட்டம்: இது கிரிக்கெட் சட்டங்களில் அதி முக்கியமானது. அனைவரும் நன்கு கற்றுக் கொள்ள வேண்டிய சட்டமாகும்.

கிரிக்கெட் ஜென்டில்மன் கேம். கிரிக்கெட் சட்டங்கள் கற்பதோடு, பண்பாடும் இவ்விளையாட்டுக்கதிகம் மிக அவசியம்.



மற்றும்

அமைப்பு உருவாகவே காரணம் என்பதாக தோன்றுகிறது. பெண் எழுத்தாளர்கள் பலர் அல்லது பெண் பெயரை வைத்துக் கொண்டு எழுதும் ஆண் எழுத்தாளர்கள் பலர் ஆபாச மாக எழுதுவது ராஜம் கிருஷ்ணன் வகை யறாவுக்குப் பிடிக்கவில்லை. எனவே ஆபாச மாக எழுதும் அல்லது எழுதுவதாகக் கரு தப்படும் பெண் எழுத்தாளர்களை 'பெண் எழுத்தாளர் சங்கம்' சேர்த்துக் கொள்ளுமா என்பது சந்தேகம்தான்:

அதனால் செக்ஸியாக எழுதும் எழுத்தா ளர்கள் சேர்ந்து ஒரு சங்கம் அமைக்கலாம். அதற்கு ''கவர்ச்சி இலக்கிய படைப்பாளர் சங்கம்'' என்று கௌரவமான பெயர் சூட்ட லாம். இதிலும் கூட, ''கவர்ச்சி இலக்கிய ஆண் படைப்பாளர் சங்கம்'', ''பெண் படைப்பாளர் சங்கம்'', ''பெண் பெயரில் எழுதும் ஆண் படைப்பாளர் சங்கம்'' என்று உட்பிரிவுகள் தோன்றலாம்.

கவர்ச்சி இலக்கியமென்றால் அதிலும் பல தராதரங்கள் உண்டு. ''செக்ஸ் எழுது வது வேறு, செக்ஸியாக எழுதுவது வேறு'' என்று வாதிடுவோர் உண்டு. ''செக்ஸ் வேறு ஆபாசம் வேறு'' என்பர் சிலர். ''போர்னோ கிராஃபி வேறு செக்ஸ் வேறு'' என்று மல் லுக்கு நிற்பவர் உண்டு. ''போர்னோகிராஃபி யில் என்ன தவறு? காப்ராலஜிதான் கூடாது'' என்று கூறி அதைப் பார்க்க இது தேவலாம் என்று எடுத்துக் காட்டுவார்கள் சிலர். எனவே இந்த உட்பிரிவுகளுக்கேற்ப, கவர்ச்சி இலக்கியப் படைப்பாளர் சங்கத்தில் உட் பிரிவுகளும் ஏற்படுத்தி துணைச் சங்கங்கள் தோன்றலாம். இவர்கள் எல்லாரும் தனித் தனியாக மகாநாடு நடத்தி, ''எங்கள் இலக்கியம் நசிவு இலக்கியமல்ல; உங்கள் எழுத்துத்தான் மோசம்; நாட்டைக் கெடுக் கும் விஷம்'' என்று குற்றம் சாட்டி ஆவேச மாகப் பேசலாம்!

இவற்றுக்கெல்லாம் போட்டியாக தூய்மை யைப் போற்றுகிற ''நல்லிலக்கிய எழுத்தா ளர் சங்கம்'' என்றும் செக்ஸையே இலை மறை காயாக எழுதுகிற, ''நயம்பட உரைக்கும் எழுத்தாளர் சங்கம்'' என்றும் ஏற்படுத்தலாம். இவர்களை ''ஹிப்போ கிரைட்டுகள்'' என்று ஆங்கிலத்தில் வைது ஆவேசமாக எழுதுவோர், ''ஆவேச எழுத் தாளர் சங்கம்'' என அமைக்கலாம்.

ஆனால் ஒன்று. எத்தனை விதமான எழுத் தாளர் சங்கங்கள் ஏற்பட்டாலும் சரி, யாரும் ஒற்றுமையாக மட்டும் செயல்படக் கூடாது! உருப்படியான காரியங்களான, காபிரைட் உரிமை பாதுகாப்பு, நியாய ஊதியம், எழுத் தாளர் நலன் நிதி, புத்தக விற்பனையில் நியாய மான ராயல்டி, எழுத்துச் சுதந்திரப் பாது காப்பு போன்ற துறைகளில் கவனம் செலுத்தவே கூடாது. அப்படி எழுத் தாளர்கள் செய்ய ஆரம்பித்தால் வெறும் வாயை மெல்லுகிற என்போன்றோருக்கு எப் படி அவல் கிடைக்கும்? வாழ்க்கையே சார மற்றுச் சப்பென்று ஆகிவிடாதா?

# கல்யாணராமன் படவிமரிசனம்

'மயிலு சப்பாணி' ஜோடிக்குப் பிறகு கமலும் ஸ்ரீதேவியும் கல்யாண ராமன் மூலம் ரசிகர்களின் உள்ளத்தில் தங்கள் இடத்தைப் புதுப்பித்துக் கொண்டுள்ளார்கள்.

இரட்டைக் குழந்தைகள் கதையில் புதிய பரிணாமத்தைப் பரிமளிக்கக் காட்டி சபாஷ் பெறுகிறார் கதை வசன கர்த்தாவான பஞ்சு அருணாசலம்.

குறும்பு, சிரிப்பு, நளினம், துருதுருத்த பார்வை இன்னும் ஏதோவொன்று - ஸ்ரீதேவியின் நடிப்பில் அதுவும் கிராமத்துப் பெண்ணாக வரும்போது ஒரு தனிப்பட்ட கிளுகிளுப்பையும் நிறைவையும் கொடுத்து விடுகின்றன.

அவலட்சணம், அப்பாவித்தனம் கலந்த வெகுளி இப்படியொரு பாத்திரத்தை இதை விடச் சிறப்பாக வேறு யாராலும் சித்திரித்துக் காட்ட முடியாது என்னும்படி தூக்கிய பல்லும், கட்டைக் குரலுமாக எஸ்டேட் முதலாளியின் அசட்டு மகனாக என்னமாய் நடிக்கிறார் கமல்! — 'பயமா? அப்படி யொண்ணுமில்லே அந்த ஆளு கொஞ்சம் தடியனா இருக்கான் அதான்' என்று காதலியிடம் கூறும் போதும் — சின்னச் சின்ன விஷயத்துக்கெல்லாம் சமையல்கார (வி.கே. ராமசாமி) ரிடம் யோசனை கேட்கும் போதும் — மகிழும் போதும் — இப்படி காட்சி காட்சியாகக் கமல் நடிப்பின் பரிணாமங்களை விவரித்துக் கொண்டே போகலாம். சதிகாரர்கள் கல்யாணத்தைக் கொன்ற பிறகு, அவன் ஆவியாகி அண்ணன் ராமனுடன் இணைந்து நடிக்கும் போது, இரட்டையரில் மற்றவரான ராமனாக வரும் கமலின் நடிப்பு மறுபடியும் பிரமாதம்.



மேஜரின் வழக்கமான நீட்டி முழக்கும் பேச்சும் கத்தலும் இதில் இல்லை. பாராட்டுக்கள். தேங்காயும் மனோரமாவும் சிரிப்புக்குச் சிறப்புச் சேர்த்திருக்கிறார்கள். வாழ்த்துக்கள்.

மனோரம்யமான மலைக் காட்சிகளையும் இயற்கை அழகுகளையும் குளுமையான கலரில் சுருட்டிக் கொடுத்திருக்கிறார், காமிராமேன் என். கே. விஸ்வநாதன்.

சிறப்பாக இப்படத்தை இயக்கி இருப்பதற்காக ஜி. என். ரங்கராஜனுக்கு ஷொட்டும் கொடுக்கத்தான் வேண்டும்.

எத்தனையோ ராமன்கள் இருந்தாலும் நல்ல கதையமைப்பும் சிறந்த நடிப்பும் கொண்ட இந்தக் கல்யாண ராமனுக்கு ரசிகர்கள் மனத்தில் ஒரு தனி இடம் உண்டு. —கௌசிகன்

---

"டாக்டர்! எனது மகனுக்கு மூணு வயசாகுது. இன்னும் நடக்கமாட்டேன்கிறான்!"

"ஒண்ணும் அவசரமில்லே... மெதுவா நடக்கட்டும். என் மகனுக்கு முப்பது வயசாகுது... இன்னும் நடந்துக்கிட்டிருக்கான்-வேலைக்காக!" — மனோகரன்





# இடம் பெயரும் திருக்கோவில்

ஆயிரத்து இருநூறு ஆண்டுகள் பழைமையான அந்தச் சிவாலயத்தின் ஒவ்வொரு கல்லும் பெயர்த்து எடுக்கப்படுகிறது. சில நாட்களுக்கு முன்னால் நடைபெற்ற நிகழ்ச்சியின்போது ஆயிரம் பக்தர்கள் கூப்பிய கரங்களுடன், கண்களில் நீர் பனிக்க நின்றவர்கள், ஒருவரும் இதை ஆட்சேபித்து முணுமுணுக்கக்கூட இல்லை.

ஆந்திர மாநிலம் ஆலம்பூர் தாலுக்காவில் உள்ள கூடவாலி சங்கமேச்வர சுவாமியின் திருக்கோவில்தான் இப்படி ஓர் அற்புதமான திருப்பணிக்கு இலக்காகியுள்ளது.

இக்கோவில் அமைந்துள்ள கூடவாலி உட்படச் சில கிராமங்கள் ஸ்ரீசைலம் மின்சாரத் திட்டப் பணிகளால் நீரில் ஆழ்ந்துவிடும் அபாயம் ஏற்பட்டபோது ஆந்திர அரசு காஞ்சிப் பெரியவர்களின் ஆலோசனையை நாடியது. கோவிலை மூழ்கவிடலாமா அல்லது வேறு பத்திரமான பகுதிக்குப் பெயர்த்து எடுத்துச் செல்லலாமா என்ற வினவுக்கு "வேறு தகுதியான இடத்துக்குக் கோவிலை நகர்த்தலாம்" என்று பெரியவர்கள் தெரிவித்தார்களாம்.

கோவிலைப் பிரித்து எடுப்பதற்கு முன்னால் மிகவும் விரிவான முறையில் சிவலிங்கத்தின் தெய்வீக ஆற்றலை விலக்குவதற்காக ஒரு சடங்கு நடைபெற்றது. கோவிலின் ஒவ்வொரு கல்லுக்கும் எண் குறிக்கப்பட்டு, தற்போதைய இடத்திலிருந்து 25 கிலோ மீட்டர் தொலைவில் மீண்டும் இணைக்கப் படப் போகிறது. மறு கட்டுமானம் நிறைவேறிய பிறகு சிவலிங்கப் பிரதிஷ்டை செய்யப்பட்டு முறைப்படியான மந்திரப் பிரயோகங்களுடன் மீண்டும் தெய்வீக சக்தி மாற்றப்படும். அதுவரை, இடைக்காலத்தில் கவசம் ஒன்றில் பாதுகாக்கப்பட்டு வரும் "தெய்வ"த்துக்கு மந்திரப் . பிரயோகங்களுடன் பூஜைகள் நடைபெறும்.



"இருதயமாற்று ஆபரேஷன் நடந்ததிலிருந்து என் கணவர் ஒரு மாதிரிதான் நடந்து கொள்கிறார்..." — கபடி

ஏழு, எட்டாம் நூற்றாண்டுகளின் அற்புதமான கலை வண்ண வேலைப்பாடுகள் அமைந்த இந்தக் கோவில் இடம் பெயர்ந்து மீண்டும் கட்டி முடிக்கப்பட்ட பின் உள்ளே நுழைகிறவர்களுக்கு எந்த வித்தியாசமும் தெரியாதாம். இப்போதைய கட்டுமானத்துக்குக் கூடுதலோ, சீரமைப்போ எதுவும் செய்யாமல், உடைந்த நிலையில் உள்ள கற்களைக் கூட அப்படியே வைத்திருக்கப் போகிறார்கள்.

இந்த ஜனவரி மாதம் இந்திய தொல்பொருள் ஆய்வுத் துறையினர் இக்கோவிலின் பொறுப்பை ஏற்றபோது, கோவில் ஏறக்குறைய மண்ணில் புதைந்திருந்ததாம். ஆண்டுக் கணக்கில் மேலே அடிக்கப்பட்ட சுண்ணாம்புப் படிவத்தைச் சுரண்டிப் பார்த்தபோது 12, 13ம் நூற்றாண்டுத் தெலுங்குக் கல்வெட்டுகள் வெளிப்பட்டனவாம்.

எகிப்திய அஸ்வான் உயர்மட்ட அணைத் திட்ட அபாயத்தால் அழிவை நோக்கியிருந்த 'கிபூ', 'ஸிம்பல்' முதலிய பதினைந்து கோவில்களை இடப் பெயர்ச்சி முறை மூலம் பாதுகாத்தார்கள். 1967ல் நிறைவடைந்த இந்தப் பணிக்கு ஐம்பது நாடுகளின் கூட்டுறவுடன், "யுனெஸ்கோ" அமைப்பு உதவி செய்தது.

இதே முறையில் இடம் பெயரும் சங்கமேஸ்வர சுவாமி திருக்கோவில் "இருந்த" இடத்தில் பிற்கால வரலாற்று நினைவுக்காக ஒரு சிவலிங்கமும் மண்டபமும் அமைக்கப்படுமாம்.

தொல்பொருள் ஆராய்ச்சியாளர் டாக்டர் கிருஷ்ணமூர்த்தி மேற்பார்வையில் இப்பணி நடைபெறுகிறது.

ஆதாரம்: "ஹிந்து" தகவல்: சுப்ரபாலன்

# குளோஸ் அப்

## திருமதி லக்ஷ்மி கிருஷ்ணமூர்த்தி

நுகர்வோர் சங்கங்கள் நாட்டில் வலுப் பெற்றுத் தரக்குறைவான பண்டங்களின் உற்பத்தியை முறியடிக்க வேண்டும் என்று தீவிரமான பிரசாரம் செய்கிறார் லக்ஷ்மி கிருஷ்ணமூர்த்தி.

சில ஆண்டுகளுக்கு முன், பம்பாய் நகரில் மிருணாள் கோரே, பிரமீளா ரங்கனேகர், திருமதி தந்தாவதே தலைமையில் குடும்பப் பெண்களெல்லாம் ஒன்றுபட்டு ஒரு போராட்டம் நடத்தினார்கள். வெறும் தாம்பாளங்களில் கரண்டிகளை மோதி ஒலியெழுப்பி பம்பாய் நகரையே கலக்கினார்கள். விளைவு? குறைக்கப்பட்ட ரேஷன் அளவு உடனே சீர்ப்பட்டது. இந்த நிகழ்ச்சியைச் சொல்லி ஒன்றுபட்டுப் போராடினால் எந்தப் பிரச்னையையும் சமாளிக்க முடியும் என்கிறார் இவர்.

தீவிரமான அரசியலில் இல்லாதவர்கள் தான் 'கன்ஸ்யூமர் மூவ்மெண்ட்' நடத்த முடியும் என்று கருதும் இவர் ''வாசகர் வட்டம்'' நிறுவித் தரமான தமிழ் நூல்களையும் வெளியிடுகிறார்.

இவர் தம் தந்தை சத்தியமூர்த்தியைப்பற்றிச் சொன்னது... ''பார்லிமெண்ட் உரைக்காகவும், கேள்விகளுக்காகவும் இரவு நெடுநேரம் விழித்துப் பல புத்தகங்களைப் படித்துச் சிரமப்பட்டுத் தயாரிப்பார். 'பி. ஏ. படிப்பின் போதுகூட இவ்வளவு கஷ்டப்பட்டுப் படித்ததில்லை' என்று அப்பா சொல்வார்.''



லக்ஷ்மி

## மாஸ்டர் ஸ்ரீராம்

வித்யா மந்திரில் ஆறும் வகுப்புப் படிக்கும் மாஸ்டர் ஸ்ரீராமின் பிஞ்சு விரல்கள் வயலினில் மட்டுமில்லை; வண்ணத் தூரிகைகளிலும் அற்புதமாய் விளையாடுகின்றன. வீட்டு முன் அறையின் சுவரில் பாயும் குதிரைகள், துப்பாக்கிகள், ரதங்கள், சிங்கம், முதலை என்று வரைந்திருப்பதைக் கண்டு நமக்கு வியப்பாய்த்தான் இருக்கிறது. அதைவிட வியப்புத் தருவது 'சுவர் பாழாகிறது' என்று நினைக்காமல் சிறுவனின் கலைப் பிரேமைக்கு மதிப்பு தந்துள்ள தந்தை டி. என். கிருஷ்ணனின் மனப்போக்கு.

அப்பா வயலின் வாசிக்கக் கூப்பிட்டால் ''எனக்கு ஒரு புதுப் புத்தகம் வாங்கித் தரணும்'' என்கிற நிபந்தனையுடன்தான் வருவானாம். ஏராளமாய்க் கதைப் புத்தகங்கள் சேர்த்திருக்கிறான்.

திருப்பதிக் கோயிலில் ஏகாந்த சேவை நேரத்தில் திரு டி. என். கிருஷ்ணன் தன் மகள் விஜியுடன் வயலின் வாசிக்க அமர்ந்தபோது ''நான்தான் முதலில் வாசிப்பேன்'' என்று பிடிவாதம் செய்து சகோதரியின் வயலினைப் பிடுங்கி வாசித்தானாம். இப்போது அப்பாவுடன் முழுநேரமும் மேடையில் அமர்ந்து வாசிக்குமளவுக்கு ஆர்வம் காட்டுகிறான். மாஸ்டர் ஸ்ரீராம் முதலில் வாசிக்கக் கற்றுக்கொண்டது மிருதங்கம்தான்!



பூர்ணம்

## ஓவியர் ஜெயராஜ்

மதுரை அமெரிக்கன் கல்லூரியில் பி.ஏ. பொருளியல் பட்டம் பெற்ற ஜெயராஜ் ஓவியக் கலையை எந்தப் பள்ளியிலும் படித்ததில்லை. தாமே சொந்த முயற்சியால் கற்றுக் கொண்டாராம். ஆரம்ப நாட்களில் அமெரிக்க ஓவியர் நார்மன் ராக்வெல்லின் ஓவியங்கள் இவருக்குத் தூண்டுதலை ஏற்படுத்தியதாம்!

மேற்கத்திய இசையில் நாட்டமுள்ள இவர் அற்புதமாக மௌத் ஆர்கன் வாசிப்பார். கர்நாடக இசையிலும் ஆர்வமுண்டு.

கதைப் பக்கங்களை வெறுமே புரட்டி ஒதுக்கி விடாமல், படிக்கத் தூண்டுவதற்குப் படங்கள் தேவை. ஒரு கவர்ச்சியான இடத்தைத் தேர்ந்தெடுத்து ஓவியம் அமைப்பதுதான் ஆர்ட்டிஸ்டின் கடமை என்று சொல்லும் ஜெயராஜ் குழந்தைகளுக்கான பத்திரிகைகளிலும் படங்கள் போடுகிறார்.

## திரு பூர்ணம் விசுவநாதன்

நாடகத் துறையில் நாற்பத்து இரண்டாண்டுக்கால அனுபவம் பெற்ற திரு பூர்ணம் விசுவநாதன் ''இதை ஒரு சமுதாயப் பணியாகவே கருதுகிறேன். மேடை எனக்குக் கோவில் மாதிரிதான்'' என்று பெருமையுடன் சொல்கிறார். மத்திய அர

ஸ்ரீராம்



ஜெயராஜ்



சின் செய்தி ஒலிபரப்புத் துறையில் பணியாற்றி ஓய்வு பெற்றிருக்கிறார் இவர்.

1945-ம் ஆண்டில் ஒரு தற்காலிக வேலையிலிருந்த திரு பூர்ணம், இராணுவத்தில் சேர ஆசைப்பட்டார். ஆனால் போர் முடிவடைந்து அதிகாரிகள் தேர்வே நடக்கவில்லை.

—யெஸ்பால்



# சிரித்தாலே கவர்ச்சிதான்!

ஆசிரியர்: அரசாங்கம் ஒரு குறிப்பிட்ட அளவுக்கு மேல் நோட்டுக்களை அச்சடித்துக் கொண்டே போக முடியாது..

மாணவன்: அதனால்தான் சார் பொது ஜனங்களும் அடிக்க ஆரம்பிச்சுட்டாங்க.

—எஸ். பிரகாஷ்

●

பெரிய சைஸ் செங்கல் வேணும்.''

''ஏன்?''

''எங்க கராத்தே மாஸ்டர் பிறந்தநாள் அன்னிக்கு 'கேக்'குக்குப் பதிலா செங்கல் வெட்டப் போறாராம்.'' -வெ.சீதாராமன்

●

''மாடிப் படிகளில் மயக்கம் போட்டு நீங்க உருண்டு விழுற சீனை உங்களைக் கேட்காமல் 'டூப்' போட்டு எடுத்தது தப்பு என்கிறீர்களா?'' —டைரக்டர்

''டூப் போட்டது தப்பில்லே! ஆனால் ஒரு குட்டி யானையை உருட்டி விட்டு 'லாங் ஷாட்'லே எடுத்தது தான் தப்பு என்கிறேன்!'' —நடிகை



—டி. சந்தர்

●

பத்திரிகை ஆசிரியர்: என் மனைவி ரொம்ப முன்ஜாக்கிரதை.

உதவி ஆசிரியர்: எப்படி, சார்?

பத்திரிகை ஆசிரியர்: ஒரு தொடர்கதை முடியறதுக்கு இரண்டு வாரம் முன்பே இன்னொரு தொடர்கதையைத் தொடங்கற மாதிரி ஒரு சண்டைசமாதானமா முடியற மாதிரி தெரிஞ்சா அதுக்குக் கொஞ்ச முந்தியே இன்னொரு சண்டையை ஆரம்பிச்சிடுவா.

—கே. ஆர். எம்.

●

''இதுவரை நான் முப்பது பேருக்குத் தூக்கு தண்டனை குடுத்திருக்கேன்!''

''நீதிபதியா இருந்தீர்களா?''

''இல்லே. துப்பறியும் கதை எழுத்தாளனா இருக்கிறேன்!'' —வெ. சீதாராமன்

●

வேலை இல்லாதவன்: இப்படியே உட்கார்ந்துண்டு சோம்பேறி போல் இருந்தா வாழ்க்கையே வெறுத்துடாதா...?

வேலை இல்லாதவன்: அப்படி வெறுக்கின்ற சமயம் நான் போய் உடனே கொஞ்சம் ரெஸ்ட் எடுத்துக்குவேன்...சரியாயிடும்.

●

கண்ணன்: ஏண்டா, வருத்தமாயிருக்கே?

முரளி: எல்லாரும் வேலை நிறுத்தம் செய்யறாங்களே. என்னால் வேலை நிறுத்தம் செய்ய முடியவில்லையே என்ற கவலைதான். வேலை கிடைத்தால் நானும் வேலை நிறுத்தம் செய்யலாமில்லையா? —லலிதா செல்லப்பா

●

டைரக்டர்: காதல் காட்சியை எங்கே படமாக்கலாம்?

தயாரிப்பாளர்: நம்ப படத்திலே நடிக்கிற ஹீரோவும், ஹீரோயினும் உண்மையிலே கல்யாணம் பண்ணிக்கிட்டு, அவங்க தேனிலவுக்கு அவங்க செலவிலே பாரின் போறாங்களாம். அங்கேயே வைச்சுக்கலாமே?

—ஆர். கோபாலகிருஷ்ணன்



Printed by V. Murali and published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd., at the Bharathan Press, Guindy, Madras-600 032. Editor: K. Rajendran



சமய வழிபாட்டின்ஒரு அங்கமாக இருந்து வருகிறது இந்திய பாரம்பரிய நடனம். அசைவிலே அழகு, இசையிலே எழில்— எல்லாம் இறைவனுக்கு அர்ப்பணம். பண்ணும் இசையும் பாரதக் கலைக்கு பெருமை தேடித் தருகின்றன, எல்லாம் இறைவனின் திருவடி களில் சரணடைகின்றன. சிவனே நர்த்தனம் புரிந்த நடனக் கடவுள் தானே. சிவதாண்டவம் உலகத்தின் அசைவுக்கு ஒரு சின்னமல்லவா?

இதைப் போலவே தாவண்கரே பருத்தி ஆலையில் நாங்கள் கற்பனைக்கும் எட்டாத நயத்துடன் தரமுள்ள துணி மணிகளை பாரம்பரிய கலை வடித்துத் தருகிறோம். ஒவ்வொருவரின் ரசனைக் கேற்ப எழிலான நெசவும் இழையின் கைதேர்ந்த இணைப்பும் எல்லோரையும் வியப்பில் ஆழ்த்தும்.

வட இந்தியாவைப் பிறப்பிடமாகக் கொண்ட கதக் நடனம் கலை நுணுக்க நயத்தை வெளிப் படுத்துகிறது. தொன்மை கால நுணுக்கமான ஓவியங்களிலிருந்து, ஜைன சித்திரங்கள் மற்றும் கையெழுத்துப் பிரதிகள் குறிப்பாக கல்ப சூத்திரத்தில் காணப்படும் விளக்க உரைகளே இந்த நடனத்திற்கு ஆராய்ச்சிக் குறிப்பாக அமைந்துள்ளன. தொளதொளவென முழுப் பாவாடையின் உள் இறுக்கமான 'சூரிதார்' பைஜாமா அணிவதே இந்த நடன பாணிக்கு வழக்கமான உடையாகும். முன்னும் பின்னும் அசைவதும், நுணுக்கமான, விறுவிறுப்பான நளினமான கால் அசைவுகளுமே இந்த நடன பாணியின் சிறப்பான அம்சங்கள்.

நயமிக்க துணிமணிகள் எங்களது பரம்பரைச் சொத்து

# தாவண்கெரே

தி தாவண்கரே காட்டன் மில்ஸ் லிமிடெட், தாவண்கரே-577 002.

ஷோரூம்:

காவேரி ... பெங்களூர் 560 009, ... 560 020, ... தாவண்கரே-577 002.

THOMAS/DCM/TS/E/TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேசியக் காசு

